"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reachthe End."

ஸத்யம்வத.—Speak the Truth.

Hitch your Wagon to a Star." "To Thine own Self be True."



அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : Om.

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1903-ம்வரு ஆக்ஸ்டுமீ [இலக்கம் 4.

# The Gospel of the Holy Mother.

## As presented by Her to Her Blessed Child and Son.

*On the Day of the Cleansing of the Spirit, 00.*
*(With the First Dawn of the 20th Century)*

# ஆனந்தத்தாய்மொழி.

குறிப்பு.—சுத்தாத்வைத சித்தாந்த ஸாத்விக சிரோமணியாகிய எமர்ஸன் பிறந்து இன்றைக்குச் சரியாக நூறு வருஷங்களாகின்றன. இவருடைய உண்மைப் பிரபாவத்தை ஜூலை மாசத்து விவேகசிந்தாமணியில் 87-வது பக்கத்தில் காணலாம். அமெரிக்காவில் எல்லாரும் இவர் பிறந்த நூற்றாண்டைக் கொண்டாடி வருகிறார்கள். இவருடைய ஆத்மப் பிரீதியார்த்தம் நாம் விவேகசிந்தாமணியில் பிரசுரித்து வரும் **ஆனந்தத்தாய்மொழி**யைத் திரட்டித் தனிப்பிரசுரமாக அர்ப்பணம் செய்து வெளியிடல். இதை யோதிய எம்தாயின் சர்வமத சமரசக் கொள்கைக் கொத்ததாயிருக்குமென்று திருவருட் பிரகாசத்தாற் றெள்ளென விளங்கியதால், அவ்வருட்சோதியை வணங்கி அப்படியே அர்ப்பணஞ் செய்து மேற்றிசையாரை விரும்பி இங்கிலீஷில் ஒரு விஜ்ஞாபனமும் தொடுக்கலாயிற்று. ஓம் தத்ஸத்.

(பலர் கோரிக்கைக்கிணங்க **ஆனந்தத்தாய்மொழி** மட்டும், மேலே வரைந்துள்ள முகவுரையை முதலாக வைத்து சீக்கிரத்தில் தனிப்பிரசுரமாகி வெளியிடப்படும்.)

# "OVERCOMING THE WORLD"

## OR, THE GREAT VOW OF RENUNCIATION.

## *வயிறெடுகிளத்தல்.

### உலகைவிட்டொழித்தல் அல்லது மஹாபிநிஷ்க்ரமணம்.

I.

Man the Microcosm—Analysis of His Physical Body.

மண்ணிற்பிறந்து மண்ணுகு மிவ்வுடலம்
மாயைவலைப்பட்டு மாகூபெற்ற தென்னேடி!
எண்சாணுடலுக்கும் ஒருசாண் வயிறேகாண்:
சாண்வயிற்றுக்குள்ளே சமைந்ததுநீள் குடலம்மா!
ஆகாரப்பையொன்று அதன்மேலே வீற்றிருக்கும்;
பைக்குள்ளே செல்லும்வாய் தானுக அசையுமடி;
அசையும்வாய் கொண்டதெல்லாம் அனைத்துள்ளே செல்லவிடும்;
உட்செல்வதாகாரம் அதுஉடன்படுதல் சீரணமாம்;
சீரணமாம் சக்தியினல் சித்திப்ப தென்னேடி?

II.

His Subtle Bodies or Discrimination of The Natural from Real Man i. e. Jiva and Atman.

சித்திப்ப தன்னமய மதுவேதா னுடலங்காண்!
அன்னமயத்துள்ளே அமைந்துளது பிராணமயம்:
...பார்த்தாலதுவாயு: பிராணனென்றல் வேறல்ல;
பிராணமயம்போக மூன்றுமயம் மேலுண்டு:
மனேமயமதுகாண் "நான்""என" தென்றுடிவரும்.
விஜ்ஞான மயமென்பார் கூர்புத்தி யதுவேகாண்;
ஆனந்த மயமதுவோ சுத்தமனச் சாக்ஷியம்மா;
இத்தனைக்கு மேலுள்ளான் பரமனவனெருவன்
அவனே நானன்றி அயல்வேறு அல்லன்காண்!

III.

The Pratyagatman or Adam before the Fall.

பசிதாக மெனக்கில்லை பாந்தவியந் தானில்லை!
சுகதுக்க மெனக்கில்லை சுற்றமுமே தானில்லை!
எங்குந் நிறைந்திருந்தும் ஏகாங்கியாயிருப்பேன்:

* A talk with the Belly as representing the 'World' within.
What external Nature is in the Cosmic World, So is the Belly in the Microcosm of Man.

எனக் கங்கமில்லை பங்கமில்லை இங்கிதசங் கேதமில்லை :
மானமில்லை ஈனமில்லை மாயை மயக்கமில்லை :
ஊணுறக்கந் தானில்லை ஊனமொன் றுமெனக்கில்லை :
மணவிமக்க ளெனக்கில்லை மாநிலத்தார் யாருமில்லை.
இப்படியிருக்கு‡மெனக்கோர் குறைசொல்லி
1 மாயக்காரியவள் †மதினியிடம் முறையிட்டாள்.

IV.

The Evolution of Natural Man or creation of EVE and MAN's fall.

முறையிட்ட சப்தமது முழங்கியதே யம்பரத்தில்§
அம்பரத்தாடு மழகனது கண்டுகொண்டே
† ஆடாடென் றாடினன் ஆட்டிவிட்ட பம்பரம்போல்
2 தேவியவளொருத்தி தேவடியாள்போற் குதித்தாள்.
ஆட்டமுங்குதிப்பு மதிசயமா யிருக்குதென்று
ஆனந்த மயங்கடந்து அகண்டவெளியாயிருந்த
3 ஆதியவள் எனையின்றுள் அவசரமா யோடிவந்தாள் :
4 மாயப்புலைச்சியவள் மகிழ்ந்துசில வார்த்தைசொல்ல
5 மாயவுருவானேனுன் மனமறுகப் பேசலுற்றேன்.

V

Natural Man and His bitter Experience of the World i. e. After 'Paradise Lost.

பேசினபேச் சென்ன வாதிட்ட வார்த்தையென்ன
6 மாயைவந்து ஜாலஞ்செய்ய மல்லுக்குநான் நின்றதென்ன
சொல்லச்சொல்ல வளருமம்மா சூதுவாது தொடருமம்மா.
சுருங்கச்சொல்லி விளங்கவைப்பேன் சின்மயமே சாக்ஷிநிற்பாய்.
மாயையவள் கையாலே மதனன்7பட்ட அவஸ்தையெல்லாம்
சொல்லத்தான் எளுது சொல்வன்மை போதாது:

1. Maya or Avidya symbolised by the Serpent in the Bible.

‡ Perfect Man or Adam before his Fall.

† Vidya or true knowledge - EVE before the fall:—Perfect Womanhood—the Crowning Glory of God's creation.

§ The Voice reached the Throne of God *i.e.* The Self-luminous plane or The highest plane transcending thought where the *light* of all lights shineth in Glory.

† Set the Great Law of Evolution to work.

2 The Divine Energy called the Word or the Holy Ghost.—The whole line means: The Law of Evolution began to work with the utmost speed.

3 Suddhamayā *at one* with God, variously called Parasakti, Ambika and other names all connoting the same stat of consciousness known as the Turya state or Paramahamsa—pure Satva.

4 Asuddhamaya *i.e.* impure or tainted by a slight admixture of Rajas and Tamas or subject to Gunas *i. e.* to passion and ignorance *i. e.* Nature in the Eve that yielded to Temptation.

5 Denotes the fall of Man from his perfect State: Describes Jivotpathi, or birth of Natural Man.

6 The Differentiating Spirit called the World or Worldly Spirit.

7 The real man *i. e.* the Soul of man or Atman that knows and wills.

8 வயிற்றையவன் நொந்துகொண்டான் வாயால்மிகப்பிதற்றலுற்றான்;
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிமிக நொந்துபோனான்.
பாழ்வயிறே பழங்கினறே பழிபாவ முனக்கிலையே!

VI.

His disgust of the world and turning away from its vanities.

"இதா ஹிதம்பாராயே 'இடும்பை கூர் என்வயிறே!'
உன்னைத் தூர்த்தாலும் தூர்வதில்லை தூரெடுத்தாலும் தெளிவதில்லை
துறந்தாலும் விடுவதில்லை துதித்தாலுங் கேட்பதில்லை
உறைத்தால் உபாதிகொள்வாய் புளிப்பானால் போகா தென்பாய்
மிகுந்து போட்டால் வருந்திடுவாய் குறைந்து போட்டால் எரிந்திடுவாய்
மட்டுமிதம் தப்பாமல் மணிசிறிதும் பிசகாமல்
சுசிருசிபோ டென்றனுக்கு சமைத்துச் சுடப்படைக்கவேண்டும்.
வேண்டியதை வேண்டியபடி வேணமட்டும் படைத்தேனே!
படைத்ததற்குப் பயனென்சொல் பாழ்வயிறே பெருச்சாளியே."9

VII.

His thirsting to attain his former state of Bliss or endeavour to regain Paradise.

"உண்டுடுத் துறங்கியுனக் குழைத்ததெல்லாம் போதுமென்றே
ஓய்ந்தொழிந் துட்கார வுன்னினே னுள்ளத்தே.
நீ ஆட்டிவைத்தபடியெல்லாம் ஆடினேன் வெகுகாலம்
ஆடிபலுத்ததன்றி ஆனதொன்று கண்டதில்லை.
பண்டைபோ லுன்றனுக்குப் படைக்க இப்போ ஆளில்லை;
ஆளில்லா வேளையிலே நீ படுத்தல்லோ பிழைக்கவேண்டும்!
சுசியென்ன உருசியென்ன சொகுசு தானுனக்கென்ன!
அடைகாய் கனிகிழங்கு அகப்பட்டதைப்புசிக்கும்—
பெரியதொரு வீடுதனில் பெருமை யுனக்குண்டோ சொல்வாய்!"

VIII.

Rising of the Christ in Man: Takes the Great Vow of Renunciation and thus "Overcomes the World."

"உன்னோடு வாழ்தலரி" துணர்ந்தே யுனையொழித்தார் பெரியோர்கள்;
உனையொழிக்காக் காரணத்தா லுழலுகின்றேன் மிகநொந்து;
உன்னோடு ஒத்துவாழ உபாயமொன்று சொல்லுவன்கேள்,
என்சொற்படியே நீநடந்தால் எக்காலும் சுகித்திடலாம்:
"கண்டது கிடைத்ததுவைக் கனிவுடனே பரிந்தளிப்பேன்;

8 Belly the Symbolical representation of the Cosmic World or external Nature in the Microcosm of Man.

9 The fabled Vehicle of Ganesa or Vigneswara, the Lord of Nature and Natural or Psychic Powers which are the greatest obstacles to realisation by man of his own true Self.

10. Aiming to lead the original Blissful Life of undifferentiating knowledge which is Life Eternal.

அளித்ததைப் புசித்து நீ யடங்கியே யிருந்தையானால்,
அகிலமுழு துனதாகு மதிலேதும் சங்கையில்லை;
சற்றேனு மேனுமாறுக விருந்தாயே யாமாகில்,
கூறுமனுனை யொழித்துக் குந்திடுவேன் சும்மாகாண்.''

ஓம் தத் ஸத்.

## ஜீவயாத்திரை.—LIFE'S PILGRIMAGE.

1.

அருளெனப்படுவது மருளற்ற சிந்தை
மருளே யிருளில் மயக்க மச்சமுமாம்
மயக்கந்தானறும் மாசற்ற சிந்தையில்
சிந்தை தெளியத் தெளியச் சிவமதுவாமே.

2.

சிந்தைய தென்னச் சித்தென்ன வேறில்லை
சிந்தை தெளிந்திடச் சித்ததுவாமே
சித்தது வாவது முள்ளொளி தானே
உள்ளொளி விளங்கிடும் சித்சபையாமே.

3.

உள்ளொளியாவ துள்ளுணர்ச் சோதியே
உள்ளுணர்ச் சோதியு மூனுணர் வழிந்தது
ஊனுணர் வாவது முலகறி ஞானமே
உலகறிஞான முடலுண்மை யென்றிடும்.

4.

உடலுண்மை யென்றே யுலகை யாய்ந்திடும்
உடலுக்கின்ப முலகிலே யென்றிடும்.
உலகெலாந்தேடி யலுத்தது போனபின்
உடலைவிட் டுயிரிலே யின்பத்தைத் தேடிடும்.

5.

இன்பத்தைத்தேடி யிகசுக நாடிடும்
இன்பமிகத்திற்கண்டத னுண்மையுணர்ந்தபின்
மின்னற்போலது மறைவதென்றொறுக்கும்
ஒறுத்தபி னுண்மையை யுலகிலே தேடிடும்.

6.

உலகமோ கானற்சலமாம் கடுவெளித்தோற்றம்
உலகமே சதமெனி னுண்மைய துபோற்றப்படும்
மலமிகு சிந்தையை மாயையி லாட்டிடும்
மாலுமியில்லா மரக்கலமாக்கிக் கடுவெளி
[தன்னிற் கரைந்திடுமதுவே.

7. கடுவெளிபோலக் கரைந்திடு மது காற்றுமல்ல
சுடுவெளிபோலச் சுட்டிடுமது நெருப்புமல்ல
நடுவெளியாக நின்றிடுமது ஆகாசமல்ல
நீர்நிலைபோலத் தோற்றிடுமது சலமுமல்ல.

8. சலமுமல்லவது பிருதிவியெனப் பேர்கொண்ட பூதமுமல்ல;
மலமுள நெஞ்சின் தோற்றமே யல்லா லதிலொரு பேதமுமில்லை:
பேதத்தை நீக்கியே பேதமறக் காண்பார்க்கது கடுவெளித்தோற்றமாம்:
கடுவெளியாவதும் சுடரொளியாவதும் கடவுளேயன்றி வேறொன்றல்ல.

"As We Think So We Are"

# "மனம்போலிருக்கும் மாங்கல்யம்"

"மனம்போலிருக்கும் மாங்கல்யம்." இந்தப் பழமொழியை நம்மிந்துக்களில்பெண்டீர்கள் வெகு சாதாரணமாய் வழங்கி வருகிறார்கள். ஒரு ஸ்திரீ மற்றொருவளைப் பார்த்து அவளுக்குண்டான மேன்மையையோ தாழ்மையையோ சிந்தித்து அதற்காஸ்பதமான காரணமு மவளிடத்திருக்கக் கண்டபொழுது "மனம்போலிருந்தது மாங்கல்யம்; அதற்கு யார் என்ன செய்யலாம்" என்று சொல்வது வழக்கம். சிறு பெண்களுக்குப் புத்தி சொல்லும் பொழுதும், 'அம்மா நீ யாரையும்பற்றிக் கெடுதல் நினையாதே: நம் மனம்போலிருக்கும் மாங்கல்யம்" என்று சொல்வதுண்டு. இந்த அதி சாதாரணமான வசனத்தில் அதிமேலான உண்மைவிதியொன்று பொதிந்துகிடக்கிறது. அதை மேற்றிசையாரில் அதி மேலான விஜ்ஞான சிரேஷ்டர் இப்பொழுது தான் கண்டுபிடித்து நூதனமாக ஒருவாறு அநுஷ்டிக்கத் தொடங்குகிறார்கள். மேற்றிசையாருக்கு நூதனமாகப்படும் அதிமேலான வுண்மை, நம்மவர்க்குள் அதி சாதாரணமாக வழங்கிவரும் பழமொழியாம் பண்டைச்சொல்லாக விருக்கிறது. இதனால் வேதபூமியாம் இப்பரதகண்டத்தில் ஸத்யம் வெகு காலமாகத் தழைத்து விளங்கியதென்பது விளங்குகிறதல்லவா? இப்பழமொழியிற் பொதிந்து கிடக்கு முண்மை யென்னவெனில், நம்மனம் எப்படியிருக்கிறதோ, அப்படியே இருக்கும் நமக்கு வரும் நன்மையும் என்பதாம். மேற்றிசையார் கண்டுபிடித்திருக்கு முண்மையாவது: "நாமெப்படி நினைக்கிறோமோ அப்படியே எல்லாம் நமக்கு லபிக்கிறது"—என்பதாம். **எண்ணம்** மின்சாரத்திலும் அதி சூக்ஷ்மமான சக்தி வாய்ந்த ஒரு தத்துவப்பொருள் என்பது அவர்களுக்கு இப்பொழுது தான் உள்ளத்தில் உதித்து அதை பஹிர்முகாராய்ச்சி வழியாக அவர்கள் சங்கையற வுணர்ந்து உண்மை யென்று ஒப்புக் கொள்ளுகிறார். இந்த வுண்மை அனாதிகாலந்தொட்டு இந்தியாவிலுள்ள பக்தர்கள், முத்தர்கள், யோகிகள், ஞானிகள் எல்லாராலும் ஸத்யவழியிற் செல்வதற்கு முதலுண்மையாகக் கொண்டு அனுஷ்டித்து வரப்பட்டிருக்கிறது. தாயுமானவர்,—

> "சந்ததமும்வேதமொழி யாதொன்றுபற்றினது தான்வந்துமுற்றுமெனலால்
> சகமீதிருந்தாலு மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லை
> சிந்தையறியார்க்கீது போதிப்பதல்லவே செப்பினும்வெகுதர்க்கமாம்"

—என்று வெகு அழகாக இந்த வுண்மையை யெடுத்துச் சொல்லியிருக்கிறார். நாம் உண்மையாக எண்ணும் எண்ணம்போல் எல்லாம் நமக்கு லபிக்கிறதாயிருந்தால், அப்பொழுது நமக்கு நேரிடும் இன்பதுன்பாதிவிஷயங்களுக்கெல்லாம் நாமே யல்லவோ காரணமாகிறோம். 'மனம்போலிருக்கும் மாங்கல்யம்". "மங்கல்யம்" இகபரசுக மெல்லாவற்றையும் அளிக்கக் காரணமாயிருக்கும் சுமங்கலித்வமாம். அதாவது பத்னித்துவம். ஒரு ஸ்திரீ அடையக்கூடிய எல்லாப் பேறுகளிலும் மேலானபேறு மாங்கலியப்பேறாம். "தாயே, ஈசுவரி, என்னை என்ன செய்தாலுஞ் செய், மாங்கலியப் பிச்சைமட்டும் குறைவின்றிக் கொடுத்தருக்ஷி" யென்னும் இந்த ஒருவரனே தர்மபத்னிகளெல்லாரும் கோறும் வரனும். நாமறிந்த உத்தமபத்னியாம்

ஒரு இளைஞர் அவள் சிறு பெண்ணாயிருந்த காலத்தில் கணவனோடு வாழவந்த புதிதில் தன் குற்றங்குறைகளைத் திருத்திக்கொள்ளும் பொருட்டு, அவைகளைக் குறிப்பிட்டு வைத்து வந்த தினசரிக்குறிப்பில், அன்றன்றாடம் நடந்த சம்பவங்களையும் அதன்மேல் அவள் மனதுக்குப்பட்ட எண்ணங்களையும் குறிப்பிட்டபின், 'ஸ்வாமி, நல்லபுத்தியைக் கொடுக்கவேண்டும்; மங்கிலியத்தோடு போகவேண்டும்' என்ற பிரார்த்தனை தினப்பிரதிகுறிப்பின் கடைசியிலும் எழுதியிருந்தது. இப்பெண்மணி இந்த இடையறாச் சிந்தனையால் மிகவும் மேலான நல்வழியடைந்ததன்றி, சாவித்திரி சத்தியவான் உயிரைக் காத்தது போல், தன் பர்த்தாவுக்கு நேர்ந்த மரணபத்தையும் தன் பக்தி வலிமையினால் நீக்கி, அவருக்கு உய்யும்வழிகாட்டி தானும் மாங்கல்யத்தோடு நல்ல பதவி யடைந்தார். இப்படிப்பட்ட புண்ணியவதிகள் இப்புவியில் எத்தனையோ பேர்களிருப்பதினால் தான் தர்மம் தலைகவிழ்ந்து போகாது எப்போதும்போல் நாலுகாலால் நடந்து தவழ்ந்து வருகிறது. ஆகையால் இதைவாசிக்கும் நண்பர்களே "நம்மனம் போலிருக்கும் மாங்கல்யம்" என்பதை உறுதியாய்க் கொள்ளுங்கள். உறுதியாய் நம்பி உண்மை வழிப்பட்டு நடவுங்கள். ஊருக்கு முலருக்கு மொப்பநடித்து உள்ளத்தில் கள்ளம் பாராட்டுவதை விட்டொழியுங்கள். ஏனென்றால் உங்கள் எண்ணமறிந்து உள்ளபடி உங்கள் எண்ணமிருந்தவாறு படியளிக்கும் **பரமன்** உங்கள் உள்ளத்திலேயே நீங்களறியாது வாசஞ் செய்து வருகிறான். உங்கள் **உள்ளமுடையானை** ஏமாற்ற உங்களால் முடியாது. தேகத்தில் உருவத்தில் ஸ்திரீ புருஷ வித்யாசமெப்படியிருந்த போதிலும், தேகம் விட்டு தேகியாம் ஜீவனுக்கு **அகமுடையான்** அவன் ஒருவனே. எல்லாவுயிர்களுக்கும் புருஷனாயிருத்தலால் அவனைப் புருஷோத்தமனென்று வேதங்கள் சிலாகித்துக் கூறுகின்றன. இந்தப்பரமபுருஷனுக்கு ஸ்திரீ புருஷரூபமான நாமெல்லாரும் ஸ்திரீகளே யாவோம்: இவன் கையால் தொட்டுக் கட்டிய தாலி நம்கழுத்திலிருந்தால் தான் நமக்கு எல்லா சுபமும் சுகிர்தமுமுண்டு. புருஷார்த்தம் நான்கும் இந்த மாங்கல்யப்பிச்சை யொன்றினாலேயே நாம் அடையப் பெறுவோம். நாம் நமது ஆண்பிள்ளைகளுக்குக்கால்கட்டுக் கட்டுவதாகச் சொல்லி ஒரு பெண்ணைப்பிடித்து அவள் கழுத்தில் மூன்று முடிச்சும் முற்றப்போட்டு இருவரு மினிப் பிரிவின்றி சுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் கட்டின கட்டுக்குப் பங்கமின்றி யிழுத்துக் கொண்டு உண்மை வழிப்பட்டுய்யுங்கள் என்று வாழ்த்துகிறது போலவே, எல்லாம் வல்ல கடவுள் ஜீவகோடிகளை யெல்லாம் சிருஷ்டித்து மானுடசீவன்களையெல்லாம் தனக்கு ஒரு கால்கட்டாகக் கட்டிப்போட்டுக்கொண்டு, நாம் உய்யும்படி நம்மோடு கூட விருந்து மன்றாடி வருகிறார். இந்த உண்மையை யறிந்தே ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்,

> "சித்தமெனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த
> வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே."

யென்று செப்பியுளார். அற்பஜீவனாகிய நாம் ஒரு பெண்ணை மனைவியாகக் கொண்டு அதனால் வரும் சம்ஸாரபலத்தைத் தாங்கமாட்டாது தவிக்கிறோம். எல்லா ஜீவன்களையும் மனைவியாகக்கொண்ட பரமாத்மா, பற்றற்று விளங்கும் பரஞ்சோதியாகையால், சம்ஸாரபெந்தமென்பது சிறிதுமின்றி ஆக்கல் முதல் அழித்துக்காத்த லீறாகவுள்ள ஐந்தொழில்களையும் ஒரு லீலாவினோதமாக நடத்திவருகிறார். அவருக்கு விளையாட்டு நமக்கு வினையாகமுடிகிறது. ஏன்? ஸ்ரீகிருஷ்ணபகவான் சொன்னதைக் கேளுங்கள்: "நான் எல்லாவற்றையும் சிருஷ்டித்துக் காப்

பவனுயிருந்தும் நான் பற்றற்று விளங்குவதால் அக்கர்மங்கள் என்னைப் பாதிப்பதில்லை" ஆகையால் கர்மபலத் தியாகமாம், உண்மையான அகத்துறவுபூண் டொழுத்துவருவோமானால், நாமும் கர்மபந்தமின்றி, பரமபுருஷனுக்கு மனதொத்த தர்மபத்னிகளாகவிருந்து அவரோடு விளையாடி வரலாம், இதற்குவேண்டியது பற்றற்ற தன்மையும் பக்தியுமே. பற்றற்றுப்போனால் பக்தி தானே யுண்டாகும். காய் பழுத்து வீழ்ந்தால், வித்துதானே முளைக்குமல்லவா? இந்த வுண்மையை யுணர்த்தவே "விட்டுப்பிடி" யென்னும் திருவார்த்தையைத் திருவாய்மலர்ந்தருளியது— இந்த சூக்ஷ்மவிதி யுணர்ந்தே மணிவாசகப் பெருமானும் அவர் " திருப்புலம்பலில்,"

" உற்றாரை யான்வேண்டேன், ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனிஅமையுங் ;
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தா! உன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவெனே."

—என்று மனதுருக வெகு அழகாகப் பாடியுள்ளார். இப்படிக் கன்றையீன்ற தாய்போல் மனங் கசிந்து அவர் திருவடிக் கமலத்தையே நினைத் துருகிய பக்தராம் அன்பரைக்காப்பாற்ற அவரை ஆட்கொண்ட பரமசிவன் என்ன என்ன அதிசயங்களெல்லாஞ் செய்து விளையாட்டுக் காட்டினார்! குதிரை வாங்கக் கொடுத்த பொன்னை அவர் சிவனடியார்க்கு வழங்கிவிட்டு குருபாதம் கிடைத்ததென்று மகிழ்ந்து தேனுண்ட வண்டுபோல் ரீங்காரம் செய்துகொண்டு பக்திவெறி மேலிட்டுத்தடுமாறித் திரும்ப, குதிரைகளெங்கே, குதிரை வாங்கக் கொடுத்த பொன்னெங்கே யென்றுசாவி, வருத்திய அரசனுக்குக் குதிரை வருமென்று சாக்குச் சொல்லுவித்து, பக்தன் வாக்குப்பொய்யாகாது காக்க, ஊரிலுள்ள நரிகளை யெல்லாம் பிடித்துப் பரிகளாக்கித் தானும் "துரியப்பரி" யிலேறி ஒப்புயர்வற்ற குதிரை வியாபாரியாக வந்து காட்டினார்.—தான் வந்த உண்மையைத் தனது பக்தன் ஒருவனன்றி மற்றப்படியுள்ள மன்னனும் மகா ஜனங்களு மறியாமையால், பிந்தி பரிகளை யெல்லாம் நரிகளாக்கி அவை ஊளையிட்டுக் கொண்டு ஊரைப் பாழாக்கும்படிச் செய்தார். இன்னமும் அரசனுக்குப் புத்தி வராமை கண்டு வைகயில் வெள்ளத்தை வரவிட்டு, உடைப்படைக்க ஊரெல்லாங் கூடி உக்கிரமா யுழைக்கையில், தான் அங்கு பிட்டு வித்த அநாதைக் கிழவியாம் வந்தியம்மை யென்பவளுக்கு, பிட்டுக்கு மண் சுமப்பதாக ஒப்பந்தம் செய்துகொண்டு, பிட்டை வாங்கித் தின்றுவிட்டு, வேலை யொன்றுஞ் செய்யாது, மரத்து நிழலில் பள்ளிகொண்டிருந்து, கடைசியில் அரசன் விசாரணை செய்து, வேலை செய்யாமைக்காகப்பிரம்பா லடிக்க, அந்த அடி அண்டசராசரங்களிலெல்லாம் பட்டு உறைக்கும்படிச்செய்து ஒருகூடை மண்ணைக் கொட்டி யுடைப்பை யடைத்துவிட்டுத், திடீரென மறைந்து அசரீரியாய் ஆகாசத்திற் றோன்றி தான் செய்த திருவிளையாட்டுகளின் மர்மத்தை யுணர்த்தி, தன் பக்தனை இனி வருத்தாதபடி, அரசனுக்குப் புத்திசொல்லி ஆசிர்வதித்து அந்தர்த்தானமாயினார் என்பது ஐதிகம். இந்தத் திருவிளையாட்டை யின்றைக்கும் மதுரையில் ஆவணிமூலத்தன்று பிட்டுத்தோப்பில் ஸ்வாமி எழுந்தருளிப் பல்லாயிரம் ஜனங்கள் தரிசிக்கப் பெரிய உற்சவமாக நடத்தி வருகிறார்கள். ஆனால் இத் திருவிளையாட்டின் மர்மத்தை யுணர்வார் அபூர்வமாகவே யிருப்பார். ஐதிகமாக நடக்கும் திருவிளையாட்டுக எத்தனையும் அத்வைதமாகப் பார்க்கில் நம் முள்ளத்துக்குள்ளே யுண்மையாகப்படும். இந்த ஆவணிமூலத் திருவிழாச்சிறப்பை ஐதிக பாவனைக்கும் அத்வைத பாவத்துக்கும் பொருந்த நவமணி மாலை

யாகத் "திருவிளையாட்டுச் சிறப்பு" என்னும் தலைப்பெயரிட்டு ஆனந்தத்தாய்மொழிக்கு முன்னு, சையாக்கிச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதை யிதன்கீழே பார்த்தறிந்து கொள்க. இங்கே "மனம்போலிருக்கும் மாங்கல்யம்" என்னும் பெண்டீர் வசனத்திற் பொதிந்துள்ள பெரிய தோர் உண்மையை விளக்கி வற்புறுத்திக் காட்டுவதே நம் கருத்தாய் இதைத் தொடங்கியதால் அந்த மட்டோடு இதை முடிப்போம்.

ஸத்யானந்த:

"THE SACRED SPORTS—THEIR INNER MEANING."

(Avani-moolam festival)

# "திருவிளையாட்டுச் சிறப்பு".

## (ஆவணி மூலம்)

உந்திக் கமலத்துறையுமவன் சிரங்கொய்தான்
பெந்தமறுத்தாள்வான் பாரினில் வந்தவதரித்தான்
முந்தியவன் தாள்கொடுத்து முழுதுமடிமைகொண்டான்
பிந்தியவனிடர்தீர்ப்பான் பரியாக்கிநரியாக்கிப் பாரில்மிக விந்தைசெய்தான்.

புந்திநதி வைகைவெள்ளம் புலன்பொறியிற் பாயவிட்டு
மந்தமதிபாண்டியனுர் மனச்செறுக்கடக்கவெண்ணி
வந்திபம்மை கூலியாளாய் வந்துவிளையாட்டுக்காட்டி
சந்ததமுமுண்மைதனை யுலகறியச்சாற்றுவித்தான்
விந்தைமிகுசுந்தரனுர் விளையாட்டையென்சொல்வேன்!

அகங்கரித்த பிரம்மாவின் ஐந்து சிரசுகளில் ஒன்றைக்கொய்த பரமசிவனுனவர், தன்னையே சரணமென்றடைந்த பரிபக்குவம் நிறைந்த பக்தனது துக்கத்தைப் போக்குவான், பிறப்பிறப்பென்னும் திராச்சுற்றுச்சுழற்சியிற் பட்டுழலும் அவன் பெந்தங்களையறுத்து அவனை யாட்கொள்ளவேண்டி கருணைமிகுதியால், இப்புவியில் வந்து 'மான்காட்டி மான்பிடிப்பான்' செய்கைபோல், மானிட ரூபமெடுத் தவதிரித்தான். அவதரித்த பரமசிவன் குருவாகத் தோன்றி தாள்கொடுத்து அப் பக்தன்மனதை முற்றுங் கொள்ளைகொண்டு, உடல் பொருளாவியுமொருங்கே தன்னதாக வேற்றுக்கொண்டு அவன் திரிகரணங்களையும் தனக்கடிமையாக்கி, பிந்தி அதுபற்றி அப்பக்தனுக்கு நேர்ந்த துன்பங்களைத்துடைக்குமாறு, நரியைப் பரியாக்கியும், பரியை நரியாக்கியும் பலவிதமாக ஜாலவித்தைகள்செய்து உலகத்தார் அதிசயிக்கும்படி செய்தான். இவ்வளவும்செய்த எம்பிரான் இம்மட்டோடு நில்லாது அறிவு நதியாகிய வைகையில் பிரவாக முண்டாகச்செய்து, அதை நகர்ப்புறங்களிலெல்லாம் படவிட்டு, மந்தமதியுள்ளவனுன பாண்டிய ராஜன், மனச்செறுக்கை யடக்கவெண்ணி, அனுதை பாம் புட்டுவிற்று ஜீவிக்கும் ஏழைக்கிழவி வந்தியம்மைக்குக் கூலியாளாகவந்து அவள் பங்குக்குள்ள கரையைக் கட்டவுடன்பட்டும் அப்படிச் செய்யாது ஹடம் பண்ணி விளையாட்டுக்காட்டிப் பிரம்படிபட்டு

வேலையை முடித்துப் மிந்தி யெக்காலமும் உலகத்தார் உண்மையை யறியும்படி ஆகாசவாணியின் அசரீரிவாக்கினால் உள்ளதை யுள்ளபடி விளங்கவைத்தான். இப்படி மிகுதியும் வேடிக்கைகள் செய்யும் அழகனும் என் நாதன் விளையாட்டுச்சிறப்பை யான் என்னென்று செப்புவேன், ஏதென்றியம்புவேன்! ஒன்றுஞ்சொல்லவறியாது அவன் திருவிளையாட்டில் ஈடுபட்டுப் புருஷனை யடைந்த புண்யவதிபோல் மௌனஞ் சாதித்து நிற்கிறேன் என்றபடி. இற்றைக்குச் சுமார் எண்ணூறு வருஷங்களுக்குமுன் எம்பெருமானார் அவர் பக்தசிகாமணியாம் திருவாதவூரடிகளுக்குச் செய்த லீலைகளை வருஷப் பிரதிவருஷமும் பக்தஜனப்பிரீதியார்த்தம் மதுரையம்பதியில் வைகைக்கரையில் ஆவணிமூலத் திருவிழாவை முன்னிட்டு ஐதிகபாவனையாகச்செய்து காட்டுகிறார்கள். கோயிலில் இவ்வுத்ஸவம் வருஷத்துக்கொரு முறையே நேர்வதானாலும், எம்பெருமான் திருப்பாதத்தைச் சிந்தையில் வைத்து "கற்றாவின் மனம்போலக் கசிந்துருகும்" பக்த சிரேஷ்டர்களுக்குக் கடிகைதோறும் இத்திருவிளையாட்டைச் செய்துகாட்டுகிறார். ஆனாலதை சாதாரணஜனங்கள் உணர்வதற்கில்லை. வைகையிற் பிரவாகம் வந்தும், மந்திரிமார், வந்தியம்மை கூலியாளாய் வந்தவர் திருமேனியின் காந்திகண்டு அவரைத்தீண்ட அஞ்சியும், மந்தமதியாம் அரிமருத்தன பாண்டியன் மனச்செருக்கால் அவரைப் பிரம்புகொண்டடித்துப் பிரமித்து நின்றதுபோல், புத்திமான்களென்றும்," படித்தவர்களென்றும் பேர்கொண்டு விளங்கும் உளக்கண் மழுங்கிய உன்னதஸ்தானத்திலுள்ளார் எத்தனையோ பேர்கள், எம்பெருமானைப் பொற்பிரம்புகொண்டு அடிக்காது அதிலும் சூக்ஷ்மமானதும், வடுமாறுத்தன்மைபற்றி அதிலும்கொடுமை புரியத்தக்கதுமான வாக்கென்னும் நாப்பிரம்பாலடித்து எம்பெருமான் திருக்கோயில் கொண்டுள்ள "ஏழைமனம்" நோகச்செய்கிறார்கள். இவர்கள் வன்மையிலும் புன்மை பெரிதாயுளதுகண்டு அடியார் உள்ளம்புழுங்கி உடம்புவெதும்பி, வன்னெஞ்சராம் இவர் உள்ள முருகச் செய்தொழிலறியாது பரிதவிக்கின்றார்கள். தஞ்சமென்றடைந்தார்க்கஞ்சே லென்ற பயங்கொடுக்கும் ஆண்டவனையன்றி இவ்வடிமைகளுக்கு ஆக்கமுஞ் செல்வமும் வேறொன்றிலதால், விரும்பியதைப்பெறாத இளங்குழவி விம்மி விம்மியழுவதுபோல், தவித்தார் துன்பந் துடைக்குந் தயாநிதியாம் பரமதயாளுவின் பாதத்தையே சிந்தித்துப் பரிதவித் தழுவதன்றி இவர்கள் வேறொன்றறியார். இப்படிப்பட்டதோர் சமயத்தில் வெளிவந்தது இத் "திருவிண்ணப்பம்." அதை யிங்கு தீட்டிவைப்பாம்:—

"பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படிபட்ட நீ
மட்டுக்குமிஞ்சி மனங்கல்லாச் சமையலுற்றால்
எட்டுக்கு முள்ளே யிருந்தவரை யாட்டுவித்து
அட்டுண்டு வாழ்வார்க் கதியியார் வந்தாளாயோ!"

—பிட்டுக் காரியாம் †வந்தியம்மை சுட்டபிட்டுகள் எம்பிரான்வரவும் எல்லாம் உதிர்ந்து உதிர்ந்து போயின. இக்கன்னெஞ்சர் வித்யாகர்வம் மேற்கொண்டு சுடும்பிட்டுகள் எல்லாம் கல்லாகப் போகின்றன. இவருடைய எண்ணங்களும் பாவனைகளும் மனதுருகும் சுபாவமுள்ளதாக

† 'வந்தி' யென்பதற்கு வாயு, மலடி என்றிரு அருத்தங்களுண்டு. வாயுவம்மை யென்பதை மனதுக்கு காரணமாம் அந்தக்கரணத்துக்கு உவமையாகக்கொள்ளலாம். விவரமாகிப் பிள்ளைபெறாதவர்களே மலடியாதலால், பகவானைச்சிந்தையிலே வைத்துப்பூஜித்தும் அவன்திருவட்பிரசாதமாம் கருத்தாங்கி கோடிசூரியோதயமானாற்போலும் பிரகாசிக்கும் ஞானபாஸ்கரனும் குழவியைப்பெறாத சீவன்கள் மலடிகளுக் கொப்பாவார்களென்பதிற்சந்தேகமில்லையே. பக்குவனும் முமுக்ஷுவுக்கு இப்பேர்பொருந்தும்.

வின்றி, மனதைக் கல்லாக்கும் சுபாவமானவையாக விருக்கின்றன என்றபடி. இவர்கள் மனதையுருக்குவான் பரமசிவனே பிக்ஷாடனராகவந்து கபாலத்தை பிச்சையோடாகக் கொண்டு இவர்களிடத்து உயிர்ப்பிச்சை யிரந்து குடித்தாலன்றி யிவர்களுக்குப் பக்தியும் சிரத்தையு மெங்கிருந்து வரும்! அடியார் கிருபையும் அன்பும் இவர்கள் மிடிதீர்க்கப் போதாவாமென்பது கூறப்பட்டது. பகவான் நேரில்வந்து லீலைசெய்தால், "வை-கை" வழியாக, (ஆசீர்வசனார்த்தம் இவர்கள் தலையில் கைவைப்பதால் என்றபடி.) "புந்திநதி" யென்னும் மேலறிவாகிய வெள்ளம் கரைபுரண்டுவந்து, அவர்கள் புலன் பொறிகளிற் பாய்ந்து அவைகளை அப்பிரவாகத்தில் மூழ்கச்செய்து, துரியாவஸ்தை யுண்டுபண்ணி, ஸாத்விகமனச்செறுக்குக்குக் காரணமாகிய ரஜோதமக் கலப்புகளை யொழித்து சித்தி சக்திகளினும், பக்தியே அவருள்ளத்தைக் கவரத்தக்க உசிதவலையாமென்றுகாட்டி, அகங்கார மமகாரங்களை யறப்போக்கி, ஜாக்கிர, ஸ்வப்பன, சுழுத்தி, துரியாவஸ்தைகள் எல்லாவற்றிலும் (சந்ததமும்) பேதமறச்சத்திபத்தையே கண்டு களித்தனுபவிக்கும், சகஜசமாதியாம், தீராப் பெரும்பறை சாற்றுவிப்பார், (நாதத்தைக் கிளப்பி நாதாந்தத்தில் சேர்த்து வைப்பார்) என்றுணர்க. இப்படி நிமிஷந்தோறும் சொல்லமுடியாத விளையாட்டுகள் செய்துகொண்டிருக்கும் அழகுசுந்தரராம் என் பிராணநாதர் பண்டைக்காலத்து அவர் அடியார் குழாத்தோடு வந்து அடிமைகொண்ட மணிவாசகப் பெருமானும் குருமணியை உலகறிய ஆட்கொண்டதுபோல், நாயினும் கடையேனாகிய ஏழைமீ திரக்கங்கொண்டு அவரது அருட்பிரவாக வெள்ளத்தில் மூழ்கச்செய்து புலையனும் பொய்யனைப் புனிதனாக்கி அவர் திருவடிக்கண் நீங்காதிருக்கத் திருவருள்சாதித்துச் சர்வசாம்பிராஜ்யமு மளிக்கப்பெற்ற யான் அவர் திருவிளையாட்டுச் சிறப்பைக் கேட்டும் சிந்தித்தும் மனமுருகாதிருப்ப தெவ்வாறென்பது, எல்லா உண்மைப் பக்தர்களுள்ளத்திலும் இந்த ஆவணி மூலத்தன்று உதித்தெழும் உத்தம சிந்தையாயிருக்கு மென்பது சத்தியம்.

"செம்மைநல மறியாத சிதடரொடும் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையுமோர் பொருளாக்கிநாய்சிவிகை யேற்றுவித்த
அம்மை யெனக்கருளியவா றார்பெறுவார் அச்சோவே!!."—திருவாசகம்

---

THE ILIAD OF HOMER.

## ஹோமர் என்னும் மகாகவி பாடிய

# இலியயுத்தம்.

### முதற்காண்டம்.

152-வது பக்கத் தொடர்ச்சி.

அகமம்னனுக்கும் அக்கிலனுக்கும் பிணக்கம்.

36. கிறைகொள் சுந்தரச் சேயிழைதனையவ னலத்தில்
நிறையுமாசையா னீட்டிய நிதியையு நினையா

துறையவ் வென்னிடத் திருத்தலா லும்பருக் கென்மேற்
செறியும் வெஞ்சின மூண்டதோ சிறிதுமொழிந்தாய்.

(இ-ள்.) சிறைப்பிடித்துக்கொண்ட அழகிய மடந்தையை அவள் மேல்வைத்த மோகத்தினலே அவள் தந்தை கொடுப்பதாகச்சொல்லிய திரவியங்கள் ஒன்றையும் கருதாமல் என்னிடத்தே இருத்திக்கொண்டதனலேதேவர்களுக்கென்பேரில் ஆற்றற்கரிய கொடுஞ்சினம்மூண்டதோ? நல்லசெய்திசொன்னய்!

37. அழகிலுங்குணத் தலவிலுமறிவிலு மாக்கும்
எழில்கொண்மா வினைத்திறத்தினு மிணையிலா துயர்ந்து
மழைமதர்க்கணென் கிளிதினிவனப்பினுஞ் சிறந்த
குழைகிழித்தவேல் விழியினையுகத்தலுங் கொடிதோ.

(இ-ள்.) அழகிலும், நற்குணங்களிலும், அறிவிலும், காரியத்திலும் தனக்கொருவர் சமானமில்லாதபடிச்சிறந்து குளிர்ந்து மதர்த்த கண்களையுடைய என் பட்டமகிஷியாகிய கிளிதினியினும் அழகிற்சிறந்த மடந்தையை நான் விரும்புதல் கொடிய செய்கையாகுமோ? அதற்குக் கதிர்க்கடவு ளிவ்வாறு கோபிக்கவேண்டுமோ?

38. கருணையார்தருங் கடவுளர் கன்னியைத் துறக்கென்
றருள்செய்வாரெனி லின்னையே யனுப்புவ லெனக்கோர்
வெருவுவெங்குறை நேரினும்விரும்பு மென்குடிகட்
கொருவெந்தீமையு முறுவகையளித்தலெற் குரித்தே.

(இ-ள்.) அருள்நிறைந்த தெய்வங்கள் நீ அக்கன்னிகையைச் சிறைவிடுத்தனுப்ப வேண்டுமென்று எனக்குக்கட்டளை யிடுவாராயின் நானிந்த க்ஷணத்திலே அவர்கள் ஆக்கினைப் பிரகாரம் அனுப்பிவிடுவதில் ஆக்ஷேபனையில்லை. எனக்கு எவ்வளவு கோரமான விபத்துக்கள் வந்தபோதினும் குற்றமில்லை, நான் விரும்பும் என்குடிகளுக்கு யாதோர் இடுக்கணும் வாராதபடிக் காத்தலே எனக்குரிய கடமையாகும்.

39. கோதுறுவகை குடிகளைப்புரந்திடற் பொருட்டு
மாதைநீக்குவன் மற்றிதை மனத்து நீருணர்ந்து
தீதுறுமலென் குறைகளைத் தீர்த்தலுங்கடனல்
ஏதிலாரென வெனைவிடலழகன்று நமக்கே.

(இ-ள்) என் பிரஜைகளுக் கொருகெடுதி யுண்டாகாதபடிக் காக்கவேண்டி நான் விரும்பிய நங்கையை விட்டுவிடுகின்றேன். இச்செய்கையை நீங்கள் மனத்தில் வைத்து எனக்கோர் குறையும் உண்டாகாதபடிப் பார்த்துக்கொள்ளுதல் உங்களுக்குக்கடமையாகும். வறியவர்போல நான் வருந்தும்படி நீங்கள் என்னைக் கைவிடுதல் உங்களுக்கு முறைமையன்று அந்த இளப்பம் உங்களையேசேரும்.

40. போரின்வென்றநம் வயவரிலெவர்களும் பொருந்தச்
சீருஞ்செல்வமுந் தேரலர் பாற்பறித் தடைய
வீரனகியவேந்தனே வெறுங்கைய னென்னப்
பாருளார்பகர்ந் திகழ்ந்திடா திடற்றலும் பாரமே.

(இ-ள்.) உயுத்தத்தில் வெற்றிபெற்ற நம்வீரர்களில் ஒவ்வொருவரும் அவரவர்க்குத் தக்கபடி அனேக செல்வமும் சிறந்த பொருள்களும் பகைவரிடத்திலிருந்து கவர்ந்து கொள்ள, அவர்களெல்லாருக்கும் தலைமை பூண்டிருக்கும் வேந்தனுக்கு மாத்திரம் ஒன்றும் கிடைக்கவில்லையென்று என்னைக் கைகொட்டி நகைத்திகழா வண்ணம்செய்தல் உம்முடைய பாரமாகும் என்றான்.

41. அரசனித்திற மறைதலு மக்கிலன் கேட்டுப்
புரசைமால்களிற்றி யானையிற் பொங்கினேன் சீற்றம்
வரிசைமாறிய மாற்றநீ வழுத்தினை யாங்கள்
பரிசதாப்பெறு மொண்பொருள் பறித்திடக் குறித்தே.

(இ-ள்.) இவ்வாறு அகமம்னன் சொல்லிய வார்த்தைகளைக்கேட்டு அக்கிலன் பெருமதங் கொண்ட யானைபோலக் கோபாவேசனாகி அரசனைநோக்கி, "நீ நாங்கள் பரிசாகப்பெற்ற பொருள்களை அபகரித்தல் குறித்து இப்படிப்பட்ட முறைபிறழ்ந்த வார்த்தைகளைக் கூறினாய். அதை நானறியேனோ".

42. வெய்யபோரினில் வீரரை யெதிர்த்தனம் விளித்துச்
செய்யபேரர ணழித்துவண் ணகர்பரி சிதைத்துப்
பெய்யுநீணிதி யனைத்தையும் பெய்துநின் கையில்
ஐயகோவெனவறிதி யாமகலவோ வறைந்தாய்.

(இ-ள்.) கொடிய போரினில் அநேக வீரர்களை எதிர்த்துக்கொன்று, அநேக சிறந்த கோட்டைகளை யழித்து, வளம் பொருந்திய நகரங்களைச் சிதைத்துப் பெற்ற பெருஞ்செல்வ மெல்லாவற்றையும் உன் கையில் கொட்டிக்கொடுத்துவிட்டு, நாங்கள் ஐயோ வென்று வெறுங் கையராய்ச் செல்லவோ நீ இவ்வாறு கூறினாய்?

43. நன்றுகூறினை நலந்தரு புகழினை யிகழ்ந்து
துன்றுகொள்ளையை விரும்புதி யாமெனிற் றுன்னார்
வென்றிமாபுரம் வீழ்ந்தபின் விறுப்புறப்பெறுதி
அன்றியெம் பரிசிழக்கலே மறிதியென் றறைந்தான்.

(இ-ள்.) நீ கூறினது நன்றாயிருக்கின்றது. பெருமையும் புகழும் விட்டுப்பொருளொன்றையே மேலாகக்கருதிக் கொள்ளை கொள்ளுதலை இச்சிப்பாயானால், பகைவர் நகராகிய தராய் நகரை வென்ற பின்பு வேண்டியபடிப் பெற்றுக்கொள்வாயாக அல்லாமல், யாங்கள் பெற்ற பொருள்களைப்பிடுங்கிக் கொள்ளச்சம்மதிக்கமாட்டோம். அறிவாய் என்றான்.

44. கேட்டுவேந்தனுங் கிளத்தின னீபெறக்கிடைத்த
நாட்டமாரெழி னறுநுதலனையுண் டுவக்கப்
பூட்டுவாரிளம் புணர்முலைப் பூங்கொடி யெனக்கிங்
கூட்டுமின்பினைத் துறப்பனோ வொள்ளிதிங் குரைத்தாய்.

(இ-ள்.) அதுகேட்டு அகமம்னன் சொல்லுகின்றான்; உனக்குக்கிடைத்ததோர் மாதோடும் நீ சுகித்திருப்ப நான்மாத்திரம் எனக்குக்கிடைத்த மங்கையை விட்டுவிடுவேனோ? நன்றாகச் சொன்னாய்!

45. வலியைநீவய்ப் போரினில்வானவன் போலப்
பொலிவையாயினும் யான்பெறும் பொற்கொடி தன்னைச்
சிலைவலாய்விடுத் திடுகெனச்செப்புநின் மொழியால்
அலைபுநெஞ்சனாய் விடுத்திடற் கமைவனோவறைதி.

(இ-ள்.) நீ மகாபராக்கிரமசாலிதான், ஒப்புக்கொண்டேன்; உயுத்தத்தில் தேவனைப்போலச் சௌரியத்தால் விளங்குவாய். ஆயினும், உன் சொற்படி யெல்லாம் நான் கேட்பேனென்றெண்ணி விட்டாயோ? நீ என்னை இப்பெண்ணை விட்டுவிடு என்று சொன்னமாத்திரத்திற்றானே எனக்கோர் நிச்சயபுத்தி யில்லாமல் உன்சொற்ப்படியே விட்டு விடுதற்குச் சம்மதிப்பேனா? இப்பேதை யெண்ணம் என் கொண்டாய் சொல்வாய்.?

46. பீடுமேவிய பிறைநுதற் பெண்ணமு திவட்கிங்
கீடதாம்பெரும் பொருளெனக் கீகுகவன்றேற்
கூடும்வன்சிறைப் படும்பிறகோற் றொடிதன்னை
நாடியே வலத்துடனிவன்பற்றுவ னவின்றேன்.

(இ-ள்.) என்னை அனுப்பிவிடச்சொல்லும் இந்த அமுதம் போன்ற அரிய பெண்ணுக்கீடாகப் பெரும்பொருள் எனக்குத்தருக; இல்லாவிடில், உன்னிடத்திற் சிறைப்பட்டிருக்கின்றபெண்ணினை பலாத்காரமாகக்கொள்வேன்; இது உனக்குத்தெரியத்தக்கது.

47 ஆடலேறிய வாசகன் பொருள்கொலோவல்லால்
தேடருந்திறல் யூலிசன்றிருக்கொலோ நினது
நீடுசெல்வமோ வொன்றனை நேர்ந்ததையுறுவேன்
பீடுநஞ்சினப் பெருமையும் பிழைப்பதென் னெனையே.

(இ-ள்.) வலிமைமிக்க ஆசகனது பொருளோ, அல்லது பராக்கிரமசாலியாகிய யூலிசன் செல்வமோ, அல்லது உன்னுடை நெடிய செல்வமோ, யாதேனுமொன்றை எனக்கு இஷ்டமானதைக் கவர்ந்து கொள்வேன். உங்கள் பெருமையும் கோபமும் என்னை என்னசெய்யக்கிடக்கிறது?

48 ஆகபின்னிதின் றரிவையை யருங்கலத்தேற்றி
ஓகையோடுவெங் கதிரவன் பூசனைக்குரிய
சேகில்செம்பொருள் திரண்டிடநம்மிலோர் செம்மல்
ஏகவென்பொருட் டெழின்மலி கிரிசமாநகர்க்கே.

(இ-ள்.) இவ்விஷயம் பின்பு யோசித்துக்கொள்வோம். இப்போது கிரிசையைக் கப்பலேற்றிக் கதிரவன் பூசைக்கு வேண்டிய சாமக்கிரியைகளுடனே, நான் நேரிட்டுச் செல்லுதற்கில்லாமையாலே, உங்களில் யாராயினும் ஒருவர் கிரிசமாநகருக்குச் செல்லக்கடவர்.

49 கிரிதைவேந்தனே வாசகனே மதிக்கிளர்வாற்
பெரிதுமோங்கிய பெயர்மலி யூலிசன்றனே
அரியவாற்றலா ரக்கிலனவன்கொலோ வனைந்தாங்
குரியபூசனை யுஞற்றுக கதிரவனுவக்க.

(இ-ள்.) கிரிதைநாட்டுக் கதிபதியோ, அல்லது ஆசகனே, அல்லது மதியில் வல்ல பெருமை பெற்ற யூலிசனே, அல்லது அதிபராக்கிரமசாலியாகிய அக்கிலன்தானே சென்று சூரியதேவன் மனங் களிக்கும்படி அத்தேவனுக்குரிய பூசனைகளைச் செய்துவருக. என்றான்.

வேறு.

50. ஆங்கது கேட்டலு மக்கிலனென்பான்
ஓங்குருமேற்றி னுருத்துரை செய்வான்
தீங்குறுசிந்தை செருக்கு மிகுந்தாய்
பாங்கலயார்து பகர்ந்தனை யின்றே.

(இ-ள்.) அதனைக்கேட்டமாத்திரத்தில் அக்கிலன்இடிபோலக் குமுறிக்கோபித்துச்சொல்லுகின்றான். தீங்கிழைக்கும் சிந்தையில் சர்வாதீதனாகிச் சொல்லத்தகாதவார்த்தைகளை என்னை எண்ணாமற் கூறினாய்?

51. வேந்த னெனும்பெயர் மேயினையல்லால்
ஏந்தியவுள்ளி லிருந்தகை யில்லாய்
ஆந்துணை நின்னல னாய்ந்திட லல்லால்
போந்தவர் நன்மை புரிந்திட வில்லாய்.

(இ-ள்.) வேந்தனென்று பெரிய பெயரைப் பெற்றாயே யல்லாமல் வேந்தருக்குரிய பெருமைக் குணங்கள் உன்னிடத்தில் யாதுள்ளது? சுயகாரியப்புலியாய் உன் சுயநன்மையை ஆராய்தலல்லாமல் உன்னை நம்பி உனக்குத் துணையாக வந்தவர்கள் எக்கேடுகெட்டாலும் உனக்காவதொன்றில்லை. அவர்கள் நன்மையைநீ எவ்வளவேனும் விரும்பினாயில்லை.

52 மாற்றமி வண்ணம் வழங்கியபின்னர்
ஏற்றுனதாணை யியற்றுநர் யாரே
சீற்றமுறும்பகை மீதெவர் செல்வார்
ஊற்றமு மொண்மையு முற்றவர் தாமே.

(இ-ள்.) இவ்வாறு அவமதிப்பான கொடிய வார்த்தைகளை நீ சொல்லியபின்பு உன் ஆக்கினையை யேற்று உன் சொற்படிநடக்க எவர்தாமுடன்படுவார்கள்? வலிமையையும் மானமும் பெற்ற வீரர்களில் எவர் உன்னை வேண்டிப்பகைவர்மேற் பொருதற்கெழுவார்கள்?

எஸ். முத்து ஐயர்.

## ஸ்ரீ சைலம்.

**தலமகிமை**:—இத்திருப்பதி, திருப்பருப்பதம், சீபர்ப்பதம், மல்லிகார்ச்சுனம், என்றபெயர்களாலும் வழங்குகிறது. நித்தியஸ்மரணத்தால் அதிபாவங்களையும் நசிக்கவல்லனவாய்க் கூறப்படும் பஞ்ச சைலங்களில் இஃதொன்று; இதன் சிகாதரிசனமே மறுபிறப்பின்றி மோக்ஷத்தைத்தரும் என்பது மற்றோர் பழையவாக்கு. வடநாட்டிலே, அடைதற்கு மிகவும் அருமையான மலைப்பாங்கிலே உள்ளதாயினும், இப்பதி, தேவார கர்த்தர் மூவராலும் சென்று தரிசிக்கப்பட்டு, அவர்கள் திருவாக்கால் பாடல் பெற்றிருக்கின்றது. "பார்கெழு புகழோ வாப்பருப்பதம்." என்று ஞானசம்பந்தரும், "செல்லலுறலரிய சிவன் சீபர்ப்பத மலையை அல்லலவைதீரச் சொன்ன தமிழ் மாலை" களால் சுந்தரரும், "அங்கண் மாலுடைய ராய ஐவரால் ஆட்டுணாதே உங்கள் மாலதீர வேண்டின் உள்ளத்தால் உள்கியேத்தும்" என்று அப்பரும், இதைப் புகழ்ந்து பாடியிருக்கின்றனர். சிலாதிமுனிவரது கடைசிக் குமாரராகிய பர்வதேசுர முனிவரின் கடுந்தவத்துக் கிரங்கி, அம்முனிவர் தவமியற்றிய இம்மலைச் சார்பிலே சிருஷ்டியிலுள்ள சராசரப்பொருள்கள் அனைத்தும் உளவாமாறும், அவற்றைக் காத்தற்கு வீரபத்திரரும் பைரவரும் அம்பிகையும் ஆங்கெழுந்தருளி யிருக்குமாறும், சிவபெருமான் அம்முனிவருக்கு வரமளித்ததுமன்றி, மூன்றாவது வரமாக, அம்முனிவர் சிரமீது தமது திருவடிகளைப் புனைந்து ஜோதிலிங்கஸ்வரூபமாகத் தாமும் ஆங்கெழுந்தருளியிருப்பதாகக் கூறப்படுகின்றது. திருக்கைலாயத்தினும் ஸ்ரீசைலமே தம்மனத்துக்கிசைந்த ஸ்தலமென்று பார்வதி தேவிக்கு ஒரு காலத்திற் சிவபெருமான் சொல்லுவதாகவும் கூறப்பட்டிருக்கின்றது.

**இருப்பிடம்**:—தெலுங்கு பாஷை வழங்கும் கர்நூல் ஜில்லாவிலே, நந்திக் கோட்கூர்த் தாலூக்காவிலே நல்ல மலைத்தொடரின் மத்தியிலே, இத்தலம் இருக்கின்றது. இப்பதிக்கு, மார்க்கபுரம் தாலூகாவிலிருந்து இரண்டு வழிகளும், நந்திக்கோட் கூர்த் தாலூகாவிலிருந்து ஒரு பாதையும், ஹைதராபாது சீமையிலிருந்து ஒரு மார்க்கமும் உள. செஞ்சுக்கன் என்று வழங்கும் மலைக்குறவரும், லம்பாடிகள் என்று வழங்கும் மலை இடையரும் வசிக்கும் குடிசைகளைத

தவிர, சாதாரண மனிதர் வசிக்கும் எவ்வூரும் இப்ப திக்குச் சுமார் நாற்பது மைல் தூரத்துளில்லை. கிருஷ்ணநதி, இத்தலத்தின் அடிவாரத்தில், இரண்டு மைல் தூரத்துக்குள், பாதாளகங்கை யென்ற பெயருடன் ஓடுகின்றது.

வழிப்பாதை:—மேற்கூறிய நான்கு நெறிகளில், ஒவ்வொன்றும் நாற்பது மைல் தூரமென்றே சொல்லப் படுகின்றது. அவற்றுள், நந்திக்கோட் கூர்த்தா லூசாவிலிருந்து வரும்பாதையே மிகச் சௌகரிய மானது. அவ்வழியே, பல்லக்குக்களும், பச்சைக் கம்புகளாற் சமயத்துக் கேற்பக் கட்டப்படும் "சவாரி" களும், பொதிக் குதிரை மாடு கழுதைகளும், சுலபமாய்ச் செல்லும். மாக்கபுரம் தாலூகாவிலிருந்து செல்லும் இரண்டு பாதைகளில் பொம்மலாபுரம் பாதை சௌகரியமானது. வழிநெடுக இடையிடையே கிணறுகளிருக்கின்றன. மிகச் செங்குத்தான ஏற்றங்களில் கற்படிகள் கட்டப்பட்டிருக்கின்றன. இக்கிணறுகளும் படிக்கட்டுகளும் இப்பொழுது சிலமடைந்து வருகின்றன. விரைவிற் செப்பனிடப் பட்டாலன்றி முற்று மழிந்துபோம் என்பது திண்ணம். வழிப்பாதையின் கஷ்டத்தை நோக்கின், வேண்டிய சாமான்களைக் கூலியாட்கள் தலையிலேற்றிக் கொண்டு, கால் நடையாய்ச் செல்வதே உத்தமமென்று தோன்றும். பொம்மலாபுரம் பாதையிலே, ஸ்ரீசைலத்துக்கு ஐந்து மைலுக்கிப்பால், சிகரேசுவரம் இருக்கின்றது. இங்கே ஒரு சிறு சிவன்கோயிலும், இப்பொழுது இடிந்து கிடக்கும் மண்டபங்களாற் சூழப்பட்ட ஒரு திருக்குளமும் இருக்கின்றன. அக்கோயிலின் மோட்டில் நின்று பார்த்தால், ஸ்ரீசைலம் கோபுரமும், கிருஷ்ணநதியும் நன்கு புலப்படுவது மன்றி, நாற்புறமும் மலைக்காட்சி மிகவும் அற்புதமாயிருக்கின்றது. நாடகசாலையில் ஒன்றின்பின் னொன்றாகத் தொங்கவிடப்பட்டிருக்கும் திரைகளைப் போல, மலைகள் ஒன்றின் பின்னொன்றாக நாற்புறமும் வானவிளிம்புவரையும் காணப்படுகின்றன. சிகரத்தை தரிசித்து பழைய வாக்குப்படி தாங்கள் பிறப்பற்றவரானதற்குச் சான்றாக, இச்சிகரத்தினின்றும் திருக்கோயில் வரையும் உள்ளவழி நெடுக, பிரயாணிகள் இரண்டு மூன்று கற்களை ஒரு சிறு கோயிற் போலச் சேர்த்தடுக்கி வைத்திருப்பதைக் காணலாம். மற்றையபாதைகளிலும் இவ்விதச்சாக்ஷிகள் வைக்கப்பட்டிருக்கின்றன. இதுவுமன்றி, பாதையிற்கற்களின் மீதெல்லாம் பிரயாணிகளின் பெயர்கள் வெட்டப்பட்டிருக்கின்றன.

திருக்கோயில்:—முற்றும் கல்லாலாகிய இதன் வெளிமதில், 660 அடி நீளமும் 510 அடி அகலமும் இருக்கின்றது. இம்மதில் 20 அடி முதல் 26 அடி வரையும் உயரமாயிருக்கின்றது. நான்கு சுவர்களின் வெளிப்புறமும், யானை குதிரை புலி முதலியவற்றின் சிலைகளாலும், புராணக்கதைகளை விளக்கும் சிலைகளாலும், முழுக்க நிரப்பப்பட்டிருக்கின்றது. நாற்புறமும் கோபுரங்களிருந்ததாகத் தெரியவருகின்றன. இப்பொழுது, பிரதானவாயிலாகிய கீழ்பாலும், வடபாலுமே கோபுரங்களிருக்கின்றன. இவற்றுள் வடபுறக்கோபுரமே உயர்ந்தது; அதற்கு ஏழுமாடிகளுள; இரண்டுகோபுரங்களும் நாளுக்குநாள் பாழடைந்து வருகின்றன. வடபுறக்கோபுரவாசல் செங்கற்களாலடைக்கப் பட்டிருக்கின்றது. கீழ்க்கோபுரவாயில் வழியாக உட்சென்றோமாக. கோவிலின் நாற்புறமும் தங்க முலாம் பூசிய துவஜ ஸ்தம்பங்களிருக்கின்றன. கீழ்புறக் கம்பத்துக்குப்பின் ஒரு பெரிய கல்மண்டபமிருக்கின்றது. இம்மண்டபத்தில் ஒரே பெரிய கல்லாலாகிய நந்தியொன்றிருக்கின்றது. இதற்குப்பின் மற்றொரு கல்மண்டபமிருக்கின்றது. இதன்மத்தியில் நவக்கிரகசக்கரமிருந்தது போலும். இம்மண்டபத்துக்குப் பின்பே திருக்கோயில். அதன் மூன்று புறமும் சிறிய முகப்புமண்டபங்களும் வாயில்களுமிருக்கின்றன. இம் மூன்று வாயில்களின் கதவுநிலை படிகளெல்லாம் தங்கமுலாம் பூசிய செப்புத்தகடுகளால் மூடப்பட்டிருக்கின்றன. கோயிற்குள், முதலில் ஒருபெரியமண்டபமும், பின்போர் சிறிய அறையு மிருக்கின்றன. இவ்விரண்டிற்கும் அப்பாலே மூலஸ்தானமாகிய கர்ப்பக்கிரகம். இக்கர்ப்பக்கிரகத்தின்மேல், சுமார் 45 அடி உயரமுள்ள ஒரு கோபுரமிருக்கின்றது. இக்கோபுரமும், கர்ப்பக்கிரக வெளிப்புறமும், முற்கூறிய முகப்புமண்டபங்களின்மேல் முகப்பும், ஒவ்வோர் மூக்கிலும் உள் மண்டபத்தின்மேல் கோபுரத்துக் கெதிராக மத்தியிலும் நிருமிக்கப் பட்டிருக்கும் நந்திகளும், முழுதும் சுவர்ணமுலாம் பூசிய தகடுகளாற் பொதியப்பட்டி

ருக்கின்றன.[3] இவ்வாறு தங்கமுலாம் பூசிய தகட்டாற் பொதியப்பட்டிருக்கும் பரப்பு, சற்றேறக்குறைய *50 சதுரங்களுக்குக் குறைவில்லை. இக்கோவிலுக்குப் பின்புறத்தில், அம்பாள் கோயிலிருக்கின்றது. கோயிலைச்சுற்றி அனேக கல் மண்டபங்களும், ஆலயங்களும், தீர்த்தங்களும் இருக்கின்றன'

**பூஜை:**—நித்திய பூசை, சுவாமிக்கு ஓர் சங்கமாண்டியாலும்,' அம்பாளுக்கு ஒரு கோமுட்டிச் செட்டியாலும் நடத்தப்படுகின்றது. சுவாமி பூசாரி, காலை பத்து மணிக்கு முகங்கூடக் கழுவாமல் செம்பில் நீரை யெடுத்துக் கொண்டு திருமதிலுக்குள்ளேயே அவசியகருமத்துக்குச் சென்றதையும், அம்பாள் பூசாரிக்கு அர்ச்சனையின் பெயரே தெரியா தென்பதையும் கூறிவிட்டால், பூஜைவிசேஷத்தை வேறு எடுத்துரைக்க வேண்டுவதில்லை. ஆனல், தென்னாடுகளி லில்லாத ஒரு சௌகரியம் இங்கே உண்டு: யாரும் லிங்கத்தைத் தொட்டு அபிஷேகம் பூஜை நைவேத்திய முதலியவை செய்து கொள்ளலாம். சிவராத்திரி மகோச்சவத்தில் சுவாமி தரிசனம் செய்ய, நபருக்கு 1¼ ரூபாய் வசூல் செய்யப்படுகிறது. ஒரே லிங்கத்தின் மேல் ஆயிரம் சிறிய லிங்கங்கள் செதுக்கப்பட்டுக் கோடி லிங்கமென்று பெயர் பெற்று விளங்கும் இரண்டு லிங்கங்கள் இக்கோவிலிலிருக்கின்றன. இவற்றுளொன்று, ஸ்ரீ ராமரால் பூஜிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது.

**புறக்காட்சி:**—கோயிலுக்கு வெளியே, சாரங்கதர மடம், சித்தமடம்,' விபூதி மடம், முதலிய மடங்கள் ஐந்துள. இவற்றுள் ஒன்றைத் தவிர, மிகுந்த நான்கும் பாழாய்க் கிடக்கின்றன. பாதாள கங்கைக்குச் செல்லும் வழியிலே சில கோயில்களும் மடங்களும் இருக்கின்றன. இவற்றுள் நதிக்கரையிலுள்ள கோயிலில் வெகு நேர்த்தியான சிற்பவேலையைக் காணலாம். ஆனல் எல்லாம் பாழடைந்து வருகின்றது. கோயில் திருமதிலைச் சுற்றி நாற்புறமும் சிறுசிறு கோவில்களில் 1008 லிங்கங்களும் முன் மண்டப வரிசைகளும் இருந்தன போலும். இப்பொழுது கீழ்பால் மட்டும் சில சின்னங்களுள. கோயிலுக்கு வடகிழக்கா யோடும் ஒரு மலையாறு, சிறிது தூரத்தில், ஒரு செங்குத்தான பாறையினின்றும் ஒரு பாழ்ம் பள்ளத்தில் விழுகின்றது. மேல் நின்று நோக்கின் தலையைக் கிறுக்கு மளவு ஆழமானது அக்கிடங்கு. இவ்விடம், 'பாபஹரஸரி' 'கருமாலஸரி' என்ற பெயர்களால் வழங்குகிறது. மேற்பாறையில் இரண்டு அடித்தடங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. மூடபக்தியும் விதியும் முற்றிய சிலர், அப்பாதத் தடங்களின் மீது நின்று கீழே கிடங்கிற் குதித்து உயிர் துறப்பதாகச் சொல்லப்படுகிறது.

**புராண, சரித்திர, சாசன விஷயங்கள்:**—க்ஷேத்திர ஆரம்பத்தைக் குறித்த பர்வதேசுர முனிவர் கதையை முன்பே கூறினோம்; மிகுந்த சிலவற்றைச் சுருக்கிக் கூறுவோம். பாதாள கங்கைக்கு அப்புறத்துள்ள மலைக்கு, சந்திரகுப்தமலை என்று பெயர். முற்காலத்தில் அம்மலைமீது பெரியதோர் பட்டணமிருந்ததாம். சந்திரகுப்தன் என்னோர் அரசன் அதை ஆண்டுவந்தானும். [இப்பொழுதும்,கோட்டைச்சுவர், அகிழ், முதலிய நகரச்சின்னங்கள் அம்மலைமீது காணப்படுகின்றன.] இக்கரைவந்து மேயும் அவன் பசுக்களில், ஒன்று மட்டும் மாலையில் பாலில்லாமலிருப்பதைக் கவனித்துப்பரிசோதிக்க, அப்பசு, இக்கரையிலுள்ள ஓர் புற்றில் தன்பாலைச்சென்று சொரிவதாகத் தெரியவந்ததாம். அப்புற்றைப் பரிசோதிக்க, அதற்குள், 'சிவயோகி மல்லாசு' என்ற பெரியவர் ஒருவர் இருந்தனராம். அவர் ஆக்ஞைப்படி, அரசன், அவ்விடத்தே லிங்கப்பிரதிஷ்டை செய்து, திருக்கோயிலும் கட்டினனும். கோயிற் பணியின் பொருட்டு இக்கரையிலேயே பத்துப்பன்னிரண்டு வருஷங்கள் தங்கியிருந்த அரசன், திருப்பணி முடிந்து தன்னகர்க்குச் சென்றவுடன், அரமனையிற் கண்டதோர் பெண்மணியின் மீது ஆசையுற்றனனும். அவன் வெளிப்போந்த பொழுது சிறு குழந்தையாயிருந்த பிரமராவதி யென்ற தங்கள் மகளே அம்மா தென்று, அவன் மனைவி வற்புறுத்திக் கூறியும், மோகவயப்பட்ட அரசன் அதை நம்பாது மீறியொழுகத் தொடங்கவே, அப்பெண், அவனைக் கல்லாகும்படி சபித்துவிட்டுப் பாதாளகங்கையில் வீழ்ந்திறந்தனளாம்.

ஸ்ரீசைலசிகரதரிசனத்தால்பிறப்பற்றுப்போம்என்றவாக்கியத்தைப்பற்றி ஒருகதை சொல்லப்படுகின்

* ஒரு சதுரம், ஜாதியடியில் பத்தடி நீளமும் பத்தடி அகலமும் கொண்டபரப்பு.

றது. ஒரு சிவராத்திரி புண்ணிய காலத்திலே பல்லாயிரம் பேர்கள் சுவாமி தரிசனத்தை வேண்டிவருவதைக் கண்ணுற்ற பார்வதிதேவி, ஆண்டாண்டுதோறும் பல்லாயிரம் ஆத்மாக்கள், பிறப்பற்று மோக்ஷத்தையடையின் பிரபஞ்சம் பிரஜாவிருத்தியின்றிப் பாழாய்விடும் என்று பயந்தவளாய், தன்னாதரை வினவினளாம். அச்சந்தேகத்தை நீக்குமாறு, சிவபெருமான், ஒருவிருத்தவேதியர் வடிவுபூண்டு, தம்மனைவியுடன், சிகரத்தருகேயுள்ள திருக்குளத்தையடைந்து, கால் தடுமாறி அதற்குள்விழுந்து, சாந்தருணத்தில் தத்தளித்துக் கொண்டிருந்தனராம். அவர்மனைவி கரையிலிருந்து கொய்யோமுறையோ என்றோலமிட்டு, வழிச்செல்லும் பக்தர்களின் உதவியை வேண்டினளாம்; ஆயின், கிழவரைக் கரைக்கிழுக்க எவராவது வந்து கைநீட்டியபொழுது, பாவிகள் கையைத் தொட்ட நிமிஷமே அவர் பிராணன் நீங்கிவிடுமென்று அவள்எச்சரித்ததால்,ஒவ்வொருவரும் பிரஹத்தி தோஷத்துக்கஞ்சி, உதவிசெய்யாது வழிச்சென்றனராம். கடைசியில் ஒருவேசைமட்டும் சிகரதரிசனத்தால் தன் பாவங்கள் முற்றும் நீங்கிவிட்டதாகச் சொல்லிக்கொண்டே கிழவரை யிழுத்துக் கரையேற்ற, உடனே காணாக்காட்சியைக்கண்டு சிவலோகஞ் சென்றனளாம். வாக்கியத்தை எல்லோரும் அறிந்திருந்தும், பல்லாயிரம் பக்தர்களில் ஒரு வேசைக்குமட்டுமே அதில் முழுநம்பிக்கை இருந்ததை அறிந்து, தன் கவலை யொழிந்து, லோகமாதா கயிலை சென்றாளாம்.

சாரங்கதரன் கதை யாவர்க்கும் தெரிந்த விஷயமே. நடுக்காட்டில் அவனைச் சித்திரவதை செய்த இடம், அவன் பெயரால் வழங்கும் மடத்தருகே காட்டபடுகிறது. சாசானங்களை ஆராயுமிடத்துப் புலப்படும் விஷயங்களைச் சுருக்கியுரைப்போம், கர்ண பரம்பரையான கதைகளும், இப்பொழுதுள்ள அடையாளங்களும், முற்காலத்தில் இம்மலைப்பக்கம் செழித்த நகரங்களால் விளங்கியதென்பதைத் துலக்குகின்றன. கர்ப்பக்கிரகத்தையும் முகப்பு மண்டபங்களையும் தங்கமுலாம் பூசிய செப்போடுகளால் வேய்ந்து புனைந்தவர், சாலி வாகனசகாப்தம் 1435ல் (கி. பி. 1513) விஜயநகர வேந்தர் கிருஷ்ணதேவராயர் என்று தெரியவருகின்றது. கி. பி. 1058-ம் ஆண்டில் சாலுக்கிய வேந்தன் த்ரைலோக்யன் என்பவன் இத்தலத்தைத் தரிசித்ததாக ஒருசாசன மிருக்கிறது. தமிழ்நாட்டாருக்குப் பெருமையான சாசனங்களும் சிலவுள. இத்தலத்துக்கு மானியங்களாக அநேக அரசர்கள் அநேக கிராமங்களை விட்டதைக் குறிக்கும் சாசனங்களுள், சித்தேசுவரம் என்றகிராமத்தை, குலோத்துங்கச்சோழனும் விக்கிரமசோழனும் (கி. பி. 1108-1123) விட்டதாக ஒரு சாசனமிருக்கின்றது. அன்றியும், வடபுறமுள்ள 'பொற்கம்பம்' மற்றொரு சோழனால் நாட்டப்பட்டதென்று, அக்கம்பத்தின்மீது, தமிழிலும் கிரந்தத்திலும் தெலுங்கிலும் வரையப்பட்டிருக்கிறது. தமிழ்ச் சாசனத்தை உள்ளபடி கீழே வரைவாம்:—

சகாப்தம் ௲௩௱
எயஅன மெற செ
சலலாகினற தா
துவருசம மாசி
மாதம சிவாாததி
ரி புணணியகாலத
திலெ சொழமண
டலம கொபபாா
சாவினகுமாாாசா
ளுவத திருமலயய
தெவமஹா இர்ாசா ஸ்ரீப
றுவத ஙாதன சனனதி
யிலஞட்டிந பொறகமபம

[இதன்பொருள்:—(சாலிவாசன) சதாப்தம் 1378-ன் மேற்செல்லாநின்ற தாது வருஷம் மாசி மாதம் சிவராத்திரி புண்ணிய காலத்திலே, சோழமண்டலம் கோபய ராஜாவின் குமாரர் சாளுவதிருமலைய தேவ மஹாராஜா, ஸ்ரீ பர்வதநாதன் சந்நிதியில் நாட்டின பொற்கம்பம்.]

சோழனால் நாட்டப்பட்ட இப்பொற்கம்பம், எழுபத்தினாலு வருஷங்களுக்குப்பின்பு, ஸ்ரீ சைலத்தை ஆண்டுவந்த சந்திரசேகரன் என்பவனால் ஒரு முறையும்; சென்ற தலைமுறையில் பொம்மலாபுரம் சுப்பையாநாயுடு அவர்களால் ஒருமுறையும், புனர் பிரதிஷ்டைசெய்யப்பட்டதாக, அதன்மேல் எழுதப்பட்டிருக்கிறது.

சுவாமி சந்நிதியிற் கீழ்பாலுள்ள பொற்கம்பம், சாலிவாகன சகாப்தம் 1458 மன்மதவருஷத்திலே, ஸ்ரீமன் மகாமண்டலேசுவர்களுக்கு அரசனான திருமலய்ய தேவமஹா ராஜாவின் காரியகர்த்தரான பச்சினயநாரையவாருவால், தமக்குப் புண்ணியத்துக்காக, எக்ஞசாலை மண்டபத்துடன் சமர்ப்பிக்கப்பட்டதாம்.

கர்ப்பக்கிரகத்தின் பின்புறத்திலே மேல்பாலுள்ள பொற்கம்பம், சாலிவாகன சகாப்தம்—1556-ஸ்ரீமுகவருஷத்திலே, யசுசாகா அத்தியாபகரும் ஆபஸ்தம்பஸூத்திரரும் மோத்க ஸல்லிய கோத்திரியுமான பாலுட்ல அன்னமாராஜு என்பவரால், சாம்பசதாசிவப் பிரீதியாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இவர் வம்சஸ்தர் இன்றும் உளர். வடபுறப் பொற்கம்பம், சாலிவன சகாப்தம்–1516–விஜயவருஷத்திலே, வான்மீகி கோத்திரியாகிய மாசர்லசிநாபகாநுமிகாருஎன்பவர் நாட்டியது.

இத்திருக்கோயிலைச், சிலதுருக்க வேந்தரும், நாற்பது ஐம்பது வருஷங்களுக்கு முன் 'ரோஹிலர்' என்ற வடநாட்டுத் திருடரும், சூறையாடினதாகவும் சொல்லப்படுகின்றது.

கோயிலிலிருந்து பாதாளகங்கை வரையுமுள்ள சுமார் இரண்டுமைல் தூரமும், வழிநெடுக ஒருகல்லேனும் தவிராது, பிரயாணிகளின் ஊர் பெயர் முதலியவை வெட்டப்பட்டிருக்கின்றன. கோயிலிலும் கீழ்த்தலம், திண்ணைகள், தூண்கள், எங்கே பார்த்தாலும் இம்மாதிரியான சிலா சாசனங்கள் நிறைந்திருக்கின்றன. இச்சாசனங்கள், தெலுங்கு, ஸம்ஸ்கிருதம், மஹாராஷ்டிரம், கன்னடம், தமிழ், ஹிந்துஸ்தானி, இங்கிலீஷ் முதலிய பல பாஷைகளிலும் இருக்கின்றன. இன்னும் வருஷம்தோறும் பிரயாணிகளால் புதியசாசனங்கள் வரையப்படுகின்றன

தற்காலநிலைமை:— எப்பொழுதுமே செல்லுதற்கு அருமையான மலைப்பாதையிலுள்ள படிக்கட்டுக்களும் சிலவான கிணறுகளும் பாழடைவதைப் பற்றி முன்பே கூறினோம். சீக்கிரம் செப்பனிடப்படாவிடின் இத்திருப்பதிக்குச்செல்வது முற்றும் அசாத்தியமாய்விடும். தெய்வபக்தியே இன்றி, புராதனசிற்பசாஸ்திர அபிமானத்தோடு மட்டுமே நோக்குபவருங்கூட, இக்கோயிலின் தற்கால நிலைமையைக் காணமிகவும் மனம்வருந்துவார்களெனின், அதைப் பற்றி அதிகம் சொல்லவேண்டுவதில்லை. தங்கமுலாப்பூச்சைக் கத்தியாற் சுறண்டியெடுத்து, செஞ்சுக்கள் எவ்வளவோ வேலையைக் கெடுத்துவருகிறார்கள். கோயிற்கு வெளியேயுள்ள ஒரு பாழ் மண்டபத்தில், இவ்வாறு சுறண்டியபின் எறியப்பட்ட ஆறுசெப்புத் தகடுகளை யாம் பார்த்தோம். கோபுரங்களும் மண்டபங்களும் இடிந்து பாழாய்க்கிடப்பதுமன்றி, கோயிலெங்குமே புல்முளைத்து முட்செடிகள் செழித்து வளருகின்றன. நித்திய பூஜையின் விசேஷத்தைப் பற்றி முன்பே கூறினோம். கனகசபைபோல் விளங்கும் கர்ப்பக்கிரகதுக்குள், இரண்டு பழைய இருப்புத் தகளிகளைத்தவிர வேறு ஒன்றுமில்லை; இவ்விளக்குகளும், யாராயினும் தரிசனத்துக்கு வரும்பொழுது மட்டும் ஏற்றப்படுகின்றன. காசி, சிதம்பரம் முதலிய திருப்பதிகளுக்குச் சமானமான இந்த திவ்ய க்ஷேத்திரத்தின் தற்கால நிலைமை, அம்மம்ம! மிகப் பரிதாபமானதே.

**சீர்திருத்தும் வழி:—** முற்காலத்தரசர்கள்விட்ட மானிபங்கள் போனவழி தெரியவில்லை. ஆனால், இப்பொழுதும், சிவராத்திரி காலத்திலே, வருஷந்தோறும் ரூபாய் 5000 க்கு மேல் 8000 வரை வருவந்திலாகின்றது. இப்பணத்தை மட்டுமே கிரமமாகச் செலவழித்தால், முன்னிலும் நல்ல நிலைமைக்குச் சில வருஷங்களில் கொண்டு வந்து விடலாமென்பதிற் சந்தேகமில்லை. இப்பொழுது அறுபது வருஷகாலமாக, இவ்வாலயம், கடப்பை ஜில்லா புஷ்பகிரி ஆசாரிய சுவாமிகளின் பராமரிப்பில் இருந்துவருகிறது. நமது தற்கால மடாதிபதிகளின் குணாதிசயங்களோ பேர்போனவிஷயமே. குக்கிராமங்களில் குளம்பாசியைக் குத்தகைக்கு விடுவதுபோல், கோயிலின் வருஷவருமானத்தைக் குத்தகைக் கடைத்துத் தம் மிஷ்டப்படி அநுபவிப்பதைத்தவிர, சுவாமிகள், கோயிற்பணியில் சிறிதும் கவலையுள்ளவராகத்தோன்றவில்லை; அவர்பராமரிப்பினின்னும் கோயிலை நீக்குமாறு நான்கு வருஷங்களுக்குமுன் 'சிவில்' வியாச்சியஞ் செய்யத்தலைப்பட்டசிலர், கோயிலின் பதினாலு வருஷவருமானத்தை மொத்தம் பதினாயிர ரூபாவுக்கு மடத்தாரிடம் குத்தகைக்கு வாங்கிக் கொண்டு, வியாச்சியத்தை நிறுத்திவிட்டனராம். குத்தகைதொடங்கிய இந்நான்கு வருஷங்களுக்

குள், குத்தகைக்காரர், 25,000 ரூபாய்க்குமேல் அடைந்திருப்பதாக வதந்தி. சிவாரத்திரிகாலத்திலே பணவசூலுக்கு வருவதன்றிப், பின்பு கோயிலைப் பற்றிச் சிறிதும் ஞாபகமிருப்பதாகத் தெரியவில்லை. சர்க்கார் 'அதிகாரிகளும், அக்காலத்தில் மட்டும் பந்தோபஸ்துக்காக வருகிறார்கள். அந்நியமதஸ்தர் ஆட்சியில், இராஜாங்கத்தார் கவலையுற்று இவ் விஷயத்தில் வலிந்து தலையிடமாட்டார்கள். 'சிவில்' வியாச்சியம் செய்து கோயிற் பாராமரிப்பை மேற்கொண்டேனும், அல்லது கீழ்க் குத்தகையாகக் கைப்பற்றியேனும், தேசாபிமானமும் மதாபிமானமுள்ள கனவான்கள் யாரேனும் இவ்வாலயத்தைச் சீர்ப்படுத்தினலன்றி, இப்புராதன க்ஷேத்திரம் விரைவில் அழிந்துவிடும். மூடத்தனமும் தரித்திரமுமே நிறைந்துள்ள இந்தக்கர்நூல் ஜில்லாவிலே அதற்கேற்ற கனவான்கள் இல்லையென்பது, கோயிலின் தற்கால நிலைமையால் நன்கு விளங்கும். தமிழ்நாட்டிலே, திருப்பாடல் பெற்ற அற்ப க்ஷேத்திரங்களையும் லக்ஷக்கணக்காகப் பணத்தைச் செலவிட்டுப் புதுக்கிக்கொண்டுவரும் சிவபக்தர்களாகிய நாட்டுக்கோட்டைச் செட்டிமார், இக்கோயிற்பணியைத்தம்மேற் கொண்டாலன்றி, மல்லிகார்ச்சுனருக்கு விடியுமென்று தோன்றவில்லை. க்ஷேத்திரமோ, மஹாபுராதனமானது; மஹாபுனிதமானது; மூவராலும் பாடப்பெற்றது; ஒப்புயர்வற்றது; திருப்பணிக்குவேண்டிய பணமோ, ஏராளமாய் வருகின்றது; பக்தியும், சிரத்தையும், முதலில் சிறிது கைப்பொருளுமே தேவை. இவ்வளவு சிறப்புற்ற திவ்யக்ஷேத்திரம் இப்பாழ்நிலையிலிருப்பது தமிழ்நாட்டில் தெரியாமையே, இதுகாறும் நாட்டுக்கோட்டைச் செட்டிமார் இதில் தலையிடாமைக்குக் காரணமென்று நம்பி, இவ்வளவு விபரமாய் இதைப்பற்றி எழுதலானேம். எந்த மஹானுக்கு இப்புண்ணியம் சித்திக்கக் காத்திருக்கின்றதோ, மல்லிகார்ச்சுனரே அறிவார்.

அ. மாதவையர்.

---

## சுகுணசுந்தரம்.

### X

சுகுணசுந்தரரிருவரும் இளங் காளையர்களென இருமாந்து, களங்கமற்ற சந்திரனைப்போன்ற முகத்தினராய் அவணுற்று, முன் அந்தணரையும், பின்பு தம் பெற்றோரையும் நமஸ்கரித்து கைகூப்பி நின்றனர். புத்திரர்களைக் காண்டலும் சாருமதீ தேவியாரும், அமைச்சன் மனைவியாராம் சுநீதி தேவியாரும் கண்ணீர் பெருக்கத் தலைப்பட்டனர். அப்பொழுது சுசீல சக்கிரவர்த்தியாரும் கலக்கமுற்று நின்றனர். விப்ரரோ, 'அடாராஜ! என்ன அழுகின்றனை? இந்த நாரீ மணிகள் ஏன் துன்புறுதல் வேண்டும்? எனது கோரிக்கையை நீ செய்ய வல்லவனல்லை என்று முன்னமேயேதெரியும்; நான் என்னசொல்லியுங்கேளாது மும்முறை சத்தியங் கூறினுய். அது அசத்தியமென்று யாவருமறியச் சொல்லுவையேல், யான் எனதிருப்பிடமிதோ செல்லுகின்றேன். சீக்கிரம்; சீக்கிரம்; சீக்கிரம்! என்றதட்டி உருட்டிக் கேட்டனர். சுமந்தரரோ, மகாராஜ! துன்புறுதீர். மித்ர காரியத்தைச் சாதிக்க யானிருக்கின்றேன். இவ்வற்ப காரியத்தைச்செய்ய யானே முன்னிற்பேன். 'கண்மணி சுகுண! ஓடிவா இங்ஙனம், இவ்வந்தணர் பெருமானுக்கு உனது உத்தமாங்கமாகிய சிரசைக்கொய்து, தானமாகக் கொடுக்கத் தீர்மானித்திருக்கின்றேன். நான் செய்ய விரும்புவது கொடுஞ்செய்கையே யாயினும் எனதுள்ளங் களிக்குமாறு நீ அதற் குடன்பட்டு என்னைகிருதார்த்தனக்குவாய்.' என்றுதன்பத்நியான சுநீதியை நோக்கி, 'அடி, பிராணசகி! ஏன் நீயுங் கலங்குகின்றனை? கடவுள் செயல்படி எல்லாம் நன்றாய் முடியும். மனதைச்சஞ்சலத்தில் விடாது இங்ஙனங் கடுகவருவாய். நாமிருவரும் நம்மரும் புதல்வனும் சுகுணனுடைய உத்தமாங்கமாகிய சிரசை திருப்தியாய் இவ்வாளால் கொய்து இம்மறையோனுக்களித்தல் வேண்டும்.' எனலும், சுகுணன் தந்தை பக்கலணுகி, யானே தன்யன்: என்று மழியுமிக்காயம், இதை மெய்யென்று நம்பற் பாலதன்று: எரியெனக் கென்னும், புழுவெனக் கென்னும், இந்த மண்ணுமெனக் கென்னும், பருந்தோ வெனக்கென்னும்; நரியோ எனக்கென்று புசிக்கும்; நாயோ எனக்கென்று பிடுங்கித்தின்னும்; இவ்வுடலைப் பிரியமுடன்

வளர்த்தென் செய்வது? பூர்வவாசனையாற் சொண்ட இக்காயம் நிலையன்று; என்றிருந்தாலும் இறப்பது மெய்; ஆகலின் என்சிரத்தை என்னுடைய மித்ரசிரேஷ்டனான கண்மணியாமிச்சுந்தரனுடைய சிரத்திற்குப் பதிலாக இவ்வந்தணர் அங்கீகரிப்பரேல், என்சிரமே புண்ணியஞ் செய்ததாகும்;' என்று சுமந்தரர் பக்கில் தன் தலையைக் குனிந்து காட்டி நின்றனன். அப்பொழுது சுநீதி ஒருபக்கலும், சுமந்தரர் ஒருபக்கலும் நின்று வாளைப் பிடித்துக்கொண்டு சுகுணனது கழுத்தை யறுக்க எத்தனித்தனர்.

அக்காலத்தில் அந்தணர் இவர்களுடைய மனவன்மையைக்கண்டு உளமகிழ்ந்தவராயினும், கண்களில் நெருப்புப் பொறிபறக்க சுசீலனை விழித்து நோக்கி, 'ஏ, இராஜ! என்ன சாகசம்புரிகின்றனன் இச்சுமந்தரன்றான்? இவனுடைய புதல்வனுமிந்த சுகுணனும் என்ன வேதாந்தம் படிக்கின்றனன். இங்ஙன் கொடையை யான் கொள்வேனல்லேன். உனது தவபுத்திரனது சிரத்தையே கொய்துதரல்வேண்டும். அல்லையேல் உன்மொழி பொய்மொழியேயாகும். சௌரியமிழந்து ஏன் வருந்துகின்றனை? இப்பொழுதாவது முடியாதென்று மொழிவையேல், நான் எனதிருப்பிடம் போகத்தடையிராது. என்னசொல்லுகின்றனை? இதோ பார் யான் செல்கின்றேன்.' என்று கோபித்துச் செல்லலும் சுந்தரராஜன் அவ்வந்தணரைத் தொடர்ந்து சென்று வழி மறித்து அவர்கையைப்பிடித்தழைக்க அவர் கொஞ்சஞ் சிறுநகை செய்துஞ் சற்றுக் கோபித்தும், 'அடசிறுவ! நீயேன் வீணில் வருந்துகின்றனை? உன்னுடைய தந்தை உன் சிரத்தைத் தானஞ்செய்வதாய்ச் சொன்னமொழி பொய்க்கிறது. யான் செல்லுகின்றேன்;' என்று பின்னு மிரண்டடி செல்ல, சுந்தரன் அவரதடி பணிந்து, நல்வார்த்தைகளாடி அழைத்துவந்து தன் பெற்றோரைநோக்கி, ஏதோசொல்ல வாயெடுக்கையில், சுகுணன் சிரமறுபட்டுக் கீழேவிழ, அதைக் கீழேவிழவொட்டாமல் சுநீதி கையிற்றாங்கி சுமந்தரரிடம் கொடுக்க, அதை அவர் மகிழ்ச்சியுடன் தன் கையில் வாங்கி மந்திர புரஸ்ஸரமாய் தனதில்லாள் சுநீதி தன் மைந்தனது உத்தமாங்கமாகிய சிரசின் பேரில் ஓர் உத்தரணி தீர்த்தம் விடலும், அமைச்சனும் அவ்வந்தணருக்குத் தானஞ்செய்தனர்.

அந்தணரோ அவர் கொடுத்த கொடையை ஏற்றுக்கொள்ளாது தம்கையாற்றட்டி உயரச்செல்ல எறிந்தனர். பின்பு அந்தணர் அமைச்சனை நோக்கி, சுமந்தரா! நீ அடாத காரியஞ்செய்தனை. நானிதை ஏற்றுக்கொள்ளேன். உன் தந்த்ர மென்னிடம் நடவாது. இராஜன் மொழிந்த மொழி சத்திய மொழி யாகுமா? ஆகாதா?' என்ற கடிந்த பாஷைகளுடன் தனது சடாபாரங்கள் கீழே விழுந்து பிரழ, பற்களை நர நரவென்று கடித்துக்கொண்டு 'சுசீல! யான் செல்கின்றேன்.' என, சாருமதிதேவியாரும் அந்தணர் பாதங்களைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு தங்கள் கோரிக்கைப்படி க்ஷமிக்க வேண்டும்; நாங்கள் செய்யும் கொடையை ஏற்றுக்கொள்ளல் வேண்டும். ப்ரபோ என்று இரந்தனள். சுந்தரனும் அந்தணரைப்போகவிடாமற்றடுத்து, தந்தையின் களையை யாற்றி 'பிதா! ஏன் மயங்குகின்றீர்கள்? சொன்ன மொழிப்படி நன்கொடை யளித்தலன்றோ அறனாகும்: இது மாயா பிரபஞ்சமென்று நீவிர் அறியாததோ? அந்தணர் மனங்களிக்கச்செய்தலன்றோ அழகாகும்

"முன்பு நின்றிசை நிறீஇ முடிவு முற்றிய
பின்பு நின்று றுதியைப் பயக்கும் பேரற
மின்பம் வந்துறு மெனி னிய தாயிடைத்
துன்பம் வந்துறு மெனிற் றுறக்கலாகுமோ?"

"தவத்துறை மாக்கண் மிகப்பெருஞ் செல்வ
ரீற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்
முதியோ ரென்னா னிளையோ ரென்னான்
கொடுந் தொழிலாளன்கொன்றனன்குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக்கண்டும்
கழி பெருஞ் செல்வக் கள்ளாட்டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழு
மக்களிற் சிறந்த மடவோருண்டோ
விளமையு நில்லா யாக்கையுநில்லா
புத்தேளுலகம் புதல்வருந்தாரார்
மிக்க வறமே விழுத்துணை யாவது."

என்றறியாதோ? சாதுசங்கத்தினாலும், ஜன்மாந்த்ர சத்சங்க சுகிருத விசேஷத்தாலும், காகதாளீய நியாயமாய் அரிய இந்த பூமியானது கிடைத்ததே விதையாமென, தேவர்கள், ரிஷிகள் முதலாயினோரும் ஜகத்காரணனான பரமனை பூஜ்ஜியரென்று ஸ்தோத்திரஞ்செய்வதாக சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. முமுக்ஷுவானவன் சம்சார துக்கத்திலகப்பட்டு

வெருகஷ்டத்துடன் வலையிலகப்பட்ட மான்தெரித்
தோடுவதுபோலும், இஷ்டமித்ர களத்திராதியர்களு
டன், கிரகத்திலிருக்கையில், அந்தக்ரகமக்நிதக்தமா
கிப்பற்றி எரியும்போது தெய்வகதியால் வெளிப்ப
ட்டு எரிச்சல்தாளமாட்டாமல் குளிர்ந்ததண்ணீரை
விரும்புவதுபோல் ஓர் சத்குருவைத்தேடிச்சென்று
நயவிநயங்களுடன் அவர்தாள்பணிந்து, 'ஏ' குரோ!
பற்பல வேத இதிகாஸ ஸ்மிருதி சாஸ்திர ஸ்வானு
பவங்களினல் **ஜீவத்வம்** போய் ப்ரமத்திலயமானு
லன்றி **ஜீவத்வம்** நீங்கி மோக்ஷமடையலாகாதென்று
வேதாந்தசாஸ்திரப்ரமாணமென்று கூறுவதையறிந்
தும் உபநிடதங்களின் பொருளை சாதுக்களுடன்
கூடிவிசாரிக்கும்போது சூரியமண்டலத்தின்வழியே
ப்ரமலோகமடைந்து, ப்ரமத்திலயப்படவேண்டுமென்
றும், அதற்குமுக்கியமா யாகவேண்டிய சாதனசது
ஷ்டயத்துடன்கூடி சந்நியாஸமடைந்து, சிரத்தா பக்
தித்யானயோகாதிகளால் ப்ரமலோகமடைந்து ப்ரமா
வினல் ஞானேதயமாகி மோக்ஷம் பெறவேண்டுமெ
ன்று தெரிந்தாலும் வெருகாலம்வரையில் ஜீவத்வம்
போகாமல் ஜீவனகவேயிருக்கும்படி நேரிடுகிறது.
ஜீவனுள்ளவரையில் போகாதிகள் சம்பாவிதமே.
அப்போதும் மோக்ஷாதிகாரி யாகாமல் லோகாந்தரங்
களில் வசிக்கும்படியல்லவா நேரிடுகிறது. அதனல்
ஜீவத்வம் நிவர்த்தியாகாமல் ஜன்மத்திற்கே காரண
மாகிறது என்றசுருதிகளின் உட்கருத்தை ஆராய்ந்து
பார்க்கும்போது இந்ததேகத்திலிருந்தே ப்ரமத்தில்
மோக்ஷமடைவதேசத்யம் என்கிற சுருதியின் நிச்
சயமான கொள்கையால், என்னை இந்த தேகத்ரய
அவஸ்தாத்ரய பஞ்சகோசத்திற்கு வேறுபட்டவனக
வும் சாக்ஷியாயுமுள்ள துரியகூடஸ்த ப்ரத்யகாத
மாவான அவனே யான்என்னும் ஜீவசப்தத்திற்கு
முக்கிய அர்த்தமென்கிற சுருதிவாக்கியத்தின்படி
நான் ஸ்தூல சூக்ஷ்ம காரணதேகங்களையும் லக்ஷண
மாக வறிந்து இதற்கு விலக்ஷணமாக நாமிருக்கிறோம்
என்ற குரு சிஷ்யவாதத்தினின்றும் நான் அறிந்தி
ருக்கிறேன். இத்யாதிகாரணங்களினல் உங்களுக்கு
மெனக்கும் யாதொரு சம்மந்தமுமில்லை. ஆனல் பூர்
வகர்ம வாஸனைக் கனுகுணமாய் உங்களுக்கு நான்
புத்திரனய்ப்பிறந்திருந்தாலும் மேற்கூறிய காரணங்
களால் தத்வம் வேருகலின் என்னைப்பற்றி நீங்களிரு
வரும் மற்றவர்களும் இனி சிந்திப்பதிலும், வருந்து
வதிலும் யாதும் பயன்படாது. இவ்வேதியர்க்
குறைத்தவாறு ஏ, தந்தையே! அன்னய்! நீவிர் இரு
வரும் மனமகிழ்ச்சியுடன் என்சிரத்தைக்கொய்து
நன்கொடையாக அளிக்கக்கடவீர்கள். சற்றும் தா
மதஞ்செய்யலாகாது.

"ஊருஞ்சதமல்ல வுற்ருர் சதமல்லீ வுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்ல செல்வஞ்சதமல்ல தேயத்திலே
யாருஞ்சதமல்ல நின்ருள் சதங் கச்சி யேகம்பனே!"

என்றபடி, நிலையில்லா இவ்வாழ்வைச் சதமென்
றெண்ணற் பாலதோ? சொன்னசொற்றவருது சத்
தியத்தை நிலைநாட்டுவதேயன்ருே புகழாகும். எனது
மித்ர ரத்னமா மிச்சுகுணன் சென்றவழியே யான்
செல்லல்வேண்டும். துயரையொழித்து என் சிரத்
தைத்தாமதியாது துணித்து இவ்வேதியர்க்களிமின்.
அப்பொழுதே யான் தந்தைக்குகந்த புத்திரனவ
தன்றி இப்பிறவியினலாய பயனை எளிதிலடைந்து
ஈசுவரசாயுஜ்யத்தை அடையமாட்டுவேன். நீவிரிரு
வரும் இத்தகைய கொடையை யளித்து சத்தி
யத்தை நிலைக்கப்பண்ணுவீரேல், யீசுவரப்ரீசாதத்
திக்குப் பாத்திரராவது திண்ணமேயாம்." என்று
சுந்தரன் மொழியலும், சுசீலபூபதியும், சாருமதிதே
வியும் தம்புதல்வனுடைய அமிர்தம் போன்றவார்த்
தைகளைகிரகித்து, மனந்தேறினவர்களாய் தமக்குத்
தவப் புத்திரனய்ப் பரமனுடைய அருளால் கிடைக்
கப்பெற்ற, சுந்தரனை சிரசைத் துணிக்கத்தீர்மா
னித்து வாளை யிருவருங்கையிற்ருங்கி, அவனுடைய
சங்கைப்பழிக்கும் கழுத்தை அறுக்க ஆரம்பித்தனர்.
அப்பொழுது சுந்தரன், 'ஏ, ப்ரபோ ! இதுவுமோர்
திருவிளையாடலோ உனக்கு' என்று நகைத்து

"தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் [illegible]ட்டமிதிலோ
சந்தேகமில்லை[illegible]ி மாடமாளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்தர ஜாலக்கோலம்
வஞ்சனை பொருமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்த மலபாண்டமோ
வஞ்சனை யிலாத கனவே
யெந்தநாளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
யிரவுபக லில்லாவிடத்

தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைதான்றெளியாதுசுழலும்வகையென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே"

இப்பாடலைப் பாடியபடியே தலைகுனிந்து நின்றனன். அவன் சிரம் அறுபட்டதும் சாருமதி தேவியாரும் அதைக் கீழே விழவொட்டாமல் தன்கையிற்றாங்கினள். உடனே வேதியர் மறைந்தனர். வேதியர் மறையவே அங்குள்ளோர் கண்களைப் பரித்துச் செல்லுமாறு ஓர் ஜோதிஸ் தோன்றி எல்லாரையும் பிரமிக்கச்செய்தது. பளிச்சென மின்னலைப்போன்ற அந்த ஜோதிஸ்ஸுடன் கூடவே சுகுண சுந்தரர்களுடைய சிரங்களும், உடல்களும் மறைந்தனவோ என்னும்படி அங்குள்ளவர்கள் அவைகளைக் காணமற் றிகைத்தனர். இனி சம்பவிப்பது யாதோவென ஏங்கினர்! சிலர் இதுதானோ கல்யாணக்கோலமென வருந்திக் கண்ணீர் பொழிந்தனர். இதுவு மீசன்செயலென்று வியந்தனர் சிலர். சுகுண சுந்தரர்களே தீரரெனப் புகழ்ந்தனர் பலர்.

டி. எஸ். சுப்பராமய்யர்.

---

## நமது பார்வைக்கு வந்த புத்தகங்கள்.

---

### விஜயமார்த்தாண்டம்.

இது அ. மாதவையர் அவர்களால் இயற்றப்பட்ட ஓர் "செந்தமிழ் நாவல்." இது பாண்டிய நாட்டின்கண்ணுள்ள மறவகுல திலகர்களாகிய ஜமீன்தார்களைப் பற்றியகதை. ஜமீன் வழக்கும் விவாதமும் ஊழல்களும், சண்டைசச்சரவுகளும், திரிசமங்களும், காமாதுரக்காரியங்களும், களவு, கொலை, காமத்தொழில்களும் இன்னுமுள்ள இதர அக்கிரமங்களும் இதில் நன்ருக விளங்கத் தீட்டப்பட்டிருக்கின்றன. ஜமீன்தார்கள் க்ஷயதசை யடைந்துவருவதற்குக்காரணம் இக்கதையை வாசிப்போருக்கு நன்ருக விளங்கும். இது புலிமலை ஜமீனைப்பற்றிய கதை. வழக்கம்போல் ஜமீன்தார் சந்ததியின்றி மாண்டுபோக அவர் பத்னியும் அவரைப் பின்பற்றிப் பரலோகம்செல்ல, சர்க்கார் ஜமீனைக்கைப்பற்றிக் கொண்டு பாத்தியஸ்தர்களை நியாயஸ்தலம் போய்வர உத்தரவு கொடுத்து விட்டார்கள். அசல், அப்பீல் வழக்குகள் முறைப்படி நடந்து தீர்ப்பானபின், சீமையிலுள்ள "அந்தரங்கசபைக்கு" அப்பீல் போயிற்று—கோர்ட்டுவக்கீல், குண்டுணிச் சாக்ஷிகள் எல்லாரும் வழக்கம் போல் வேண்டியபடி வாங்கி வயிறு நிறையத் தின்னபின் நாட்டுக்கோட்டைச் செட்டிமார் உதவியால் வழக்கிட்டுவந்த விஜயமார்த்தாண்டத்தேவர், வீரசங்கிலித்தேவர், இவர்களில் முன்னவர் பக்ஷம் கீழ்க்கோர்ட்டுகளில் தீர்ப்பானதை சீமையிலுள்ள அந்தரங்க சபையார் மாற்றிப் பின்னவர் பக்ஷம் தீர்ப்பளித்தார்கள். இத்தீர்ப்பான சங்கதி தந்திமூலமாய் வந்தது முதல் கதையாரம்பிக்கிறது. இக்கதைக்கு நாயகராகிய விஜயமார்த்தாண்டத்தேவர் கல்வியறிவு கேள்விகளிலும் சன்மார்க்கத்திலும் தேறியவாலிபர். உத்தம சிந்தையும் உயர்ந்த எண்ணங்களுமுடையவர். பரோபகார குணம் மிகுந்தவர். வீரசங்கலித்தேவர் எல்லாவற்றிலும் இவருக்கு நேர் எதிர்மறையாயுள்ளவர். விஜயமார்த்தாண்டர் ஜமீன் போனல்போகிறதென்று தன்படிப்பைக் கொண்டு பிழைக்க உத்தேசித்து கவர்னரைக்கண்டு டிப்டி கலெக்டர் உத்யோகம் தருவதாக அவர் கொடுத்தவாக்கைக்கொண்டு சந்தோஷமடைந்து, பால்ய வயது முதல் தன்னேடுபடித்து விளையாட்டுத் தோழியாயிருந்த சிவகாமி யென்னும் சௌந்தரவதியை பரஸ்பரம் உள்ளன்பு கொண்டு தான்நேசித்துவந்ததால், இருவரும் விவாகம் செய்துகொண்டு சுகமாய் வாழலாமென்று தீர்மானித்து அவள் தகப்பனுகிய நிரக்ஷரகுக்ஷிக்குக் கடிதமெழுத, புலிமலையில் போஸ்ட் மாஸ்டர் வேலையிலிருந்த போக்கிரி சுப்பையர், தந்நயம் கருதி, அக்கடிதத்தைத்தானே யுடைத்துப்பார்த்து, புதிதாய் பட்டத்துக்குவந்த வீரசங்கிலித்தேவர் தயவை சம்பாதிக்க விரும்பி அவருக்கு இப்பெண்ணைக்காட்டி இவளை மணம்செய்வித்து தான் ஜமீன்தாருக்கு வேண்டியவனுகி அகப்பட்டதைப் பறிக்கலாமென்றுசெய்த சூழ்ச்சியால் இக்கதை விர்த்தாந்தங்கள் அவ்வளவும் வளருகின்றன.

இக்கிராதகப்பிராமணன் செய்த சூழ்ச்சி சகுனிக்கும் தோன்றியிராது. சிவகாமியோ 16-வயதாகாப்

பெண்மணியானாலும் முதிர்ந்த விவேகமும் உள்ளன்பும் உயர்பாவமுமுள்ளவளாய் தான் அன்புவைத் தங்கீகரித்த காதலனையேயன்றி வேறுயாரையும் மணம் புரிவதில்லையென்று திடசித்தமுடையவளாய் தன் காதலன் அன்புக்குரிய உத்தமபாத்திரமாய் நடந்து கொண்டாள். இவர்களிருவருக்கு முண்டான காதல் முதிர்ந்து வழக்கம்போல் அல்லல்விளைக்க, அவற்றையெல்லாம் நமது கிரந்தாசிரியர், "காதற்பத்து—கற்புப்பத்து" எனப் பல்வத்ததிகாரங்களில் பிரித்துச்ல்லிக் கடைசியில் காதலனும் காதலியும் சொல்லொணாக் கஷ்டங்களுற்றுப் பொறுத்துப் பிராணனையும் கொடுத்து கற்பைக்காத்து வருநாளில் பிராணனுக்கோ அல்லது கற்புக்கோ வந்தது அழிவு என்று சொல்லும் படிய[illegible] ஆபத்தில் சிவகாமி மூர்ச்சித்துக் கிடக்கையில் அகஸ்மாத்தாய் அவள் காதலன் ஜெயிலினின்றும் விடுபட்டு அவளைக் காப்பாற்றக் கடைசி நிமிஷத்தில் வந்துசேருகிறான். அவள் கற்பையழிக்கயத்தனித்த ஜமீன்தார் வீரசங்கிலித்தேவரும் அவருடைய மந்திரியாகிய போ. சுப்பையரும் அவர்கள் துர்க்கிருத்தியத்துக்கு காராக்கிரகம்புகுந்து அங்கேயே தங்கள் வீணான வாணாளைக் கழித்துத் தீர்த்தார்கள். காதலனும் காதலியுமொன்றுபட்டு உத்தமமான இல்வாழ்க்கைநடத்தி வாழ்ந்தார்கள். இவர்கள் காதல் வளர்ந்ததையும் அதுமூலமா யிவர்களுக்குநேர்ந்த வில்லங்கங்களையும் இதை வாசிப்போர் தாங்களே படித்துக் களிப்பதின் ரசம் குறையக்கூடாதென்று இங்கு சொல்லவில்லை. ஆனால் சிவகாமிபட்ட கஷ்டங்களை நினைத்து நமக்குள் ஸ்திரீ புருஷ சகவாச விசேஷத்தைப்பற்றி நமது கிரந்தகர்த்தா வெடுத்துக்காட்டும் ஒரு உண்மையான குறையை மட்டும் எல்லாரும் கவனிக்கவேண்டி இங்கெடுத்துக் காட்டாது முடிக்க நமக்கு இஷ்டமில்லை. இதைப்பற்றி நமது கிரந்தாசிரியர் எழுதியிருப்பது எல்லாரும் கவனிக்கத் தக்கதாயிருப்பதால் அவருடைய ஆழ்ந்த ஆலோசனைகளையும் கருத்துகளையும் அவரெழுதியபடியே இங்கெடுத்துப் பிரசுரிக்க விரும்புகிறோம். இப்படி நாமெடுத்துக்கூற வேண்டியபாகம் நமதுத்தேசத்துக்கு மிஞ்சிநீண்டிருப்பினும்நமது ஜாதியாசாரத்திலுள் ளயர்ந்து நம் ஜனசமூக க்ஷேமத்தைக் கெடுத்துவரும் 'நல்லமரத்தில் புல்லுருவி பாய்ந்தது' போலுமுள்ள இப்பெருங்கேடு நீங்க அதை (வளர்ந்திருப்பினும்) அப்படியே எடுத்துக் கீழே பிரசுரிக்கிறோம்.

கதா நாயகியாகிய சிவகாமி தன் கற்பைக் காத்துக் கொள்வான் அதைக்கெடுக்கச் சூழ்ச்சிதேடிய தன் தாய் தகப்பனாரையும், வீட்டையும், புலிமலைஜமீன் நாட்டையும் விட்டு, சமீபத்திலுள்ள பட்டணவாசம் சென்று, அங்கும் படாதபாடுகளெல்லாம் [illegible]டு, ஊரிலுள்ள போக்கிரிகள், வீட்டிலுள்ள போக்கிரிகள், மனைவாழும் பெண்டீராம் பாதகிகள் இவர் கொடுமைக்கெல்லாம்தப்பிக் கடைசியில், கலெக்டர் தயவால் ஒரு உபாத்திச்சி வேலைபெற்றுத் தனிமையிலமர்ந்தாள். இப்படி அவள் அமரும்வரை அவள் பட்ட பாடுகளையெல்லாம் கூடவிருந் தனுபவித்தவர்போல் கேட்போர் மனம் கரைந்துருகும்படி எழுதிவந்த நம் கிரந்தாசிரியர், அவள் தன்னில்லத்தமரவும் "நம் கதாநாயகியுற்ற விபத்துகளுக்குக் காரணம் என்னவென்று ஆராய்வோமாக" வென்று சங்கற்பித்துக் கொண்டு மேலெழுதுகிறார்:—

"யௌவனமும் அழகும் ஒருங்குவாய்த்த பெண் ஒருத்தி தனித்தேனும் தன்நாயகனல்லாத யௌவன புருஷனை ஒருவனோடேனும் சஞ்சாரஞ்செய்யின், எத்தேசத்திலும் சில அசந்தர்ப்பங்களும் அசௌகரியங்களும் நேரிடவே செய்யும்; ஆயினும், நாகரிகமுற்ற நாடுகளில், இந்நாட்டைத் தவிர வேறெந்நாட்டினும், ஒன்றின்பின்னொன்றாக இத்தனை உபத்திரவங்கள் நேர்ந்திருக்கமாட்டாவென்று நாம் உறுதியாய்க் கூறலாம்: ஏனெனின், இங்குள்ளாரினும் துடுக்கான துஷ்டரும், தூர்த்தரும், பெண்களைக் கெடுத்துப் பிழைப்பதே பிரவர்த்தியாகக்கொண்ட குடிகேடரும், பிறநாடுகளிற் பெருகியுளாரெனினும், அந்நாடுகளில் நடைபெறும் ஓர் வழக்கத்தால் இவ்வாறு நிகழ்ந்திராது: ஸ்திரீகள் சுயாதீனமா யுலாவித் திரிவதும், தம்மினராயினும் அந்நியராயினும் சிறுவராயினும் பெரியவராயினும் புருஷர்களுடன் சாதாரணமாய்ப்பேசுவதும், இப்புண்ணிய பூமியைத்தவிர, மற்றெங்கும் குலாசாரமாய் அநுஷ்டிக்கப்பட்டுவருகிறது; ஆகவே, இவ்வுலகில் அயோக்கியர்களிலும் யோக்கியர்களே மிகப் பெரும்பாலாராக இன்னும் எங்குமிருத்தலின், தனியே சஞ்சரிக்கும் ஒருஸ்திரீ, தான்சந்திக்கும் ஒரு அயோக்கியனுக்குப் பலயோக்கியர்களைச் சந்தித்து, அவனாலுண்டாகக்கூடும் இடுக்

கனினின்றும் அவர்கள் மரியாதையுடன் வலிந்து செய்யும் உதவிகளினால் தப்பித்துக்கொள்வாள். அதிசுந்தர ரூபவதியாகிய இராணியொருத்தியைப்பற்றி ஆங்கிலவித்துவான் ஒருவர்எழுதும்பொழுது, அவள் நாட்டில், (பிரஞ்சுதேசம்) எவனாயினும் ஒருவன் அவமரியாதையாக அவளை ஏறிட்டுநோக்கின், அப்பார்வையைத் தண்டித்து அவன்மேற் பழிவாங்க, பல்லாயிரம் வாள்கள் தம் உறைகளினின்றும் திடீரென்று ஒருங்குகுதித்தெழுந்து கிளம்பியிருக்கும்என்று கூறியிருக்கிறார். அவ்விதமாக, சிறிதும் தன்னயங்கருதாது, அழகை அழகின் நிமித்தமே மனங்குளிரக்கண்டு, மாசுமறுவில்லா மகிழ்ச்சியிலாழ்ந்து, கண்யதை செய்யும்குணம், நம்மவருக்குள் மிகக்குறையென்பது கேவலம் உண்மையே. அக்குறைக்குக் காரணம், நம்மாதரை, நாம் பெரும்பாலும் சிறைக்காப்பில் வைத்திருப்பதும், ஒரு ஸ்திரீ அந்நிய புருஷன் ஒருவனோடு பேசுதல் மகாபாதகமென்று மதித்திருப்பதுமே. கவனியுங்கள்! செஞ்சாலியினைப் பட்டணத்தில் யோக்கியர்களே இல்லையென்பதில்லை; ஒரு தூர்த்தனுக்கு நூறுயோக்கியர்கள் இருக்கலாம்; ஆனால், சிவகாமியைப்போன்ற ஒருபெண், அந்நிய புருஷன் ஒருவனுடன் "வழியெது?" என்று கேட்கவேனும் பேசுவதும், புருஷர், எவ்வளவு யோக்கியர்களாயினும், அவளைப்போன்ற ஒருபெண்ணுடன் தாமாகப் பேசுவதும், இல்லை, முகமெடுத்துப் பார்ப்பதுங்கூட, அக்கிரமமென்று ஏற்பட்டுவிட்டால், பின்பு, அவள் உதவிபெறுவதெப்படி? துடுக்கான தூர்த்தரால் துன்புறுதொழிவது எங்ஙனமாகும்? இத்தூர்த்தர்கூட அவளிடத்துத் துணிந்து பேசுவதற்குக் காரணம் என்னவெனின், அவளைப்போன்ற பெண்கள், கற்பிழந்தாராய் இருந்தாலன்றி, ஏற்றதுணையில்லாமற் சாதாரணமாய் வெளிப்புறப்படுவது வழக்கவிரோதமாயிருத்தலே; கற்பிழந்தமாதரே தக்கதுணையின்றிவெளிவந்துலாவுதலும் புருஷரோடு பேசுதலும் வழக்கமாயிருத்தலின், கற்பரசியொருத்தி அவ்வாறு வெளிவந்துபேசவிதிவசத்தால்நேரின், அவளையும் தூர்த்தையாகவே மதித்தொழுகுகின்றோம். ஆதி ஆரியர்காலத்தில் இவ்வழக்கம் இல்லையென்றும், துருக்கர் ஆட்சியிலேயே இது பரவிற்றென்றும் கூறுவார்சிலர்; எங்ஙனமாயினும், நம்மவரிற் பெரும்பாலாரால் இது புராதன ஆசாரமாக அநுஷ்டிக்கப்பட்டுவருதுமன்றி, அதையிகழ்ந்தொழுகுவார்சிந்தனைக்கும் உள்ளாகிறார்கள். ஸ்திரீபுருஷர் ஒரேசாதி மிருகங்களைப்போற் கூடிப்பழகுதல், தீங்கையே விளைக்கும்; ஆனால், பூனையையும் எலியையும்போல் விலகியொழுகுவதும், தீங்கையே விளைக்கும்; தக்கமட்டு மரியாதையோடு பழகுதலேசரி: அங்ஙனம் ஒழுகாத நாம், இருபாலாரும் குற்றமற்ற மனத்தொடு இசைந்து பழகுவதால் விளையும் இணையிலா இன்பத்தையும், அறிவுப்பேற்றையும், ஒருவர் குறையை ஒருவர் நிரப்பி உதவக்கூடிய உதவிப்பேற்றையும் ஒருங்கிழந்து, விரைவில் விருத்தியடையாது வீழ்ந்து கிடக்கின்றோம். கற்பரசியாகிய அந்நியஸ்திரீயொருத்தி நம்மை முகமெடுத்துப் பார்த்துச் சல்லாபமாய் நம்முடன் சம்பாஷிப்பது, முடியாததாய்விட்டது: அவ்வாறு ஒரு ஸ்திரீ இப்பொழுது செய்யின், அவள் நம்மேற் காதல்கொண்டு, நம்மை விரும்புபவளாக அவளை மதிக்கும் ஈனஸ்திதிக்கு, நாம் வந்துவிட்டோம். மாதம் முந்நூறு ரூபாவுக்கு மேலான சம்பளமுள்ளவரும், நாலைந்து தாலூக்காக்களுக்கு அதிகாரியுமான ஒரு பிராமண உத்தியோகஸ்தரின் வாலிபமனைவி, தன்கணவர்கீழுள்ள சேவகர்களில் ஒருவனும், மாதம் ஆறுரூபா சம்பளமுள்ளவனுமான ஒரு துருக்கனே துணையாக, ஒரு பூந்தோட்டத்தைப்பார்க்கச் சென்றதைக் கண்ணுற்று, கற்றறிந்து பட்டமும்பெற்றகனவான்கள் சிலர், அந்த அம்மாளைக் கற்பிழந்தவளாக அவதூறுகூறியதை யாம்கேட்டுளோம். அவ்வாறு அவளைச் சந்தேகித்ததற்கு முக்கிய காரணம், அவள் கணவர் அவளைவிட்டுப்பிரியச் சகியாது எப்பொழுதும் அவளுடன் சல்லாபமாயிருப்பதும்; அவர் நண்பரிற் சிலரைக்கண்டபொழுது, அவள், தான் வீற்றிருக்கும் நாற்காலியினின்றும் எழுந்து போகாதிருப்பதுமே! இம்மட்டோ, ஸ்திரீபுருஷர் சாதாரணமாய்க் கலந்து பழகும் ஆசாரத்தையுடைய பிறநாட்டாரில், தீயொழுக்கமுள்ளார் சிலர் கிடக்க, அனைவரும் அத்தகையரென்றும், கற்பே கிடையாதென்றும், அந்நிய புருஷனோடு சல்லாபமாய்ப்பேசி அவன் கையைப்பிடித்து உபசாரமாய்க்குலுக்கும்ஒரு ஸ்திரீ அவனுடன் சற்பிழந்தவளாகவே இருக்கவேண்டுமென்றும், பெரும்பாலும் நம்புகின்றோம்! நெடுநாளைத் தூர்ப்பழக்கத்தால், பிறர்கற்பைக் கண்டுமதிப்பதே நமக்கு அரிதாய்விட்டது."

---

## "உண்மைக் கணிகல மூக்கமுடைமை"

### ஸ்வாமி உபாத்தியாயர் சாதனை.

வேதாந்த வழிபற்றி யுண்மையை நாடியுழைத்து காரியசித்தி பெறுவோர் மண்பாவைபோலும் மரப்பாவைபோலும் உலகுக்கு உபயோகமற்றவராய், மூக்கைப்பிடித்துக்கொண்டு, காட்டிலும் குகையிலும் வசிக்கிறவர்களா யிருக்கிறார்கள் என்றுசொல்லி, அனேகர் அவர்களுடைய உண்மையறியாமல் சத்தியத்தை யிகழ்ந்த சாதனவழிகளைத் தூஷிக்கிறார்கள். இது அறியாமையினாலுண்டான குற்றமென்பதிற் சந்தேகமில்லை. ஸ்வாமி விவேகானந்தர் இத்தப்பெண்ணத்தை நன்றாக வெடுத்துக்காட்டிப் போதித்ததன்றி தம்மட்டில் அதற் குதாரணமாக வுழைத்தும் பொய்யென்று காட்டி நிரூபித்தார். உண்மையில் ஸ்வானுபவம் பெற்ற எல்லாரும் இப்படியே சொல்கிறார்கள். அரைகுறையாகப் படித்துவிட்டு அற்பபுத்தியோடும் அகந்தைமேலிட்டுத் தானறியா விஷயங்களைப் பற்றித் தன்னறிவின்றிப் பேசியும் வாதுசெய்தும் வரும் புன்மதியோர் பேசசுப் பொய்யுலகில் பாவி இத்தப் பபிப்பிராயத்தை யுண்டு பண்ணி வருகிறது. இதைப் போக்கக்காலம் வந்துவிட்டது. அசத்தியத்துக்கு ஆயுள் நாளானாலும் அது அழிந்து போவதேயன்றி சாசுவதமாய் நிலைத்திருப்பதல்ல. ஆகையால் அதன் சுபாவப்படி அதற்குக் காலம் வந்துவிட்டது. "உண்மைக் கணிகல மூக்கமுடைமை" யென்பதை விளக்க நிதர்சனமாக வுழைத்துவரும் அனேக ஸத்யவான்களில் ஸ்வாமி உபாத்யாயர் என்பவர் இங்கிலாந்தில் செய்தவேலை மிகச்சிறப்புற்று விளங்குகிறது. இதைப்பற்றி "ரிவியூஆவ்ரிவியூஸ்" என்னும் பேர்போன ஆங்கிலேய மாதாந்தரப்பத்திரிகையின் ஆசிரியர் அவருடைய பத்திரிகையில் எழுதியிருப்பதை இங்குவரைதலே போதுமானது. நம் கிறிஸ்தவ சகோதரர் பிரசுரிக்கும் திராவிட வர்த்தமானியில் அதைக்காண நாம் மிகச் சந்தோஷமுற்றோம். மிஸ்டர் ஸ்டெட் எழுதியிருப்பதாவது:—

"ஒரேயொரு மனுஷன் தன் சொந்த முயற்சியினால், சாதாரணமாய் சாதிக்க முடியாத ஒரு பெருங் காரியத்தைச் செய்துமுடிப்பதைக் கண்டால் அவனைப் புகழாதிருப்பது அரிது. சென்ற வருஷம் சுவாமி உபாத்தியாய என்னும் பெயருடைய ஒரு எழைப் பிராமணன் சீமைக்கு வந்திருந்தான். அவன் சீமைச் சருவகலாசாலைகளில் ஹிந்து தத்துவங்களைப் போதிக்க ஓர் ஆசிரியர் நியமிக்கப்பட்டால் பெருநன்மையுண்டென்னும் நம்பிக்கையுடையவனாய் வந்தான். கிறிஸ்துநாதரின் ஆதிச் சீஷர்களைப்போல் கையில் தடியும் உடுத்த துணியுமன்றி வேறொன்றுமில்லானாய் வந்த அந்தப் பிராமணன் ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் கலாசாலைகளின் போதகாசிரியர்களையும், நிபுணர்களையும் தன்னபிப்பிராயத்துக்கிசையச் செய்யலாமென்று வந்தான். அவனை ஆக்ஸ்போர்ட்டில் சந்தோஷத்துடன் அங்கீகரித்தார்கள். கேம்பிரிட்ஜ் நகரத்திலும் அவனது நோக்கம் ஈடேற அநுகூலங்கள் கிடைத்தன. அங்கு ஒரு செல்வாக்குள்ள கமிட்டி யேற்படப் பிரயத்தனஞ்செய்தான். அந்தக் கமிட்டியார், இந்து தத்துவங்களைப்பற்றிப் போதிக்க எற்ற திறமையும் கல்வியும் வாய்ந்த போதகர் கிடைத்தால் மூன்றுவருஷகாலம், கேம்பிரிட்ஜ் கலாசாலையில் ஹிந்து தத்துவமுறை போதிக்க எற்பாடுகள் செய்யத் தீர்மானித்திருக்கிறார்கள். அங்கிருந்து சென்ற ஜூன்மாதம் அந்த சுவாமி உபாத்தியாய என்பவர் இந்தியாவுக்குத் திரும்பினார். அங்கே சுமார் 15,000 ரூபாய்போல் சேகரித்துக்கொண்டு, ஹிந்து தத்துவ முறையைப் போதிக்கும் காரியத்திற்காய்ச் சிறந்த பண்டிதர் ஒருவரையுமழைத்துக் கொண்டு சீமைக்குத் திரும்புவார். பணஞ்சம்பாதிப்பது சுலபந்தான். பண்டிதன் கிடைப்பதுதான் கஷ்டம் என்னவேண்டும். ஆக்ஸ்போர்டிலும், எடின்பரோவிலுள்ள கலாசாலைகளிலும் இவ்வித போதகமுறைகள் எற்படும் என்று அந்தப் பிராமணர் உறுதியாய் நம்பிக்கொண்டிருக்கிறார்"

இதை திராவிட வர்த்தமானிக்கு மொழிபெயர்த்தவர் ஸ்வாமி உபாத்யாயரை முதலில் எகவசனமாகக் கூறியிருப்பதை வித்தியாசமாக நினைக்கத் தேவையில்லை. அற்பமாகத் தோற்றுவோரும் ஆகாத காரியங்களைச் சாதிப்பார் என்பதை விளக்கக் கருதினதாகக் கொள்வது உத்தமம்.

## சிறுவர்க்கானபக்கம்.

### வாக்கு சாதுரியம்.

(விவேகசிந்தாமணியை வாசிக்கும் ஓர்பெண்மணிஎழுதியது)

நித்திய தரித்திரனாகவும் பிறவிக்குருடனாகவும் கலியாணமில்லாதவனாகவுமிருந்த ஒரு கோமுட்டியானவன் சுவாமியைக் குறித்து அனேகநாள் தபசுசெய்தான். சுவாமியானவர் அவனுக்குப் பிரத்யக்ஷமாய் வந்து, இவன் கோமுட்டியாதலால் எத்தனைவரன் கேட்பானோ என்று சந்தேகித்து பின்வருமாறு அவனைப்பார்த்து யுக்தியாய்கேட்டார். "ஓ! கோமுட்டி! நீ செய்த தபசுக்காக மிகவும் சந்தோஷமடைந்தேன். உனக்குத் தேவையான எதாவது ஒருவரன் கேள், அதிகமாய்க் கேட்டாயானால் ஒன்றும் கொடுக்காமல் மறைந்துபோவேன்," என்றார். இதைக்கேட்ட கோமுட்டி மிகவும் கிலேசித்து, நான் அனேகவரங்களைக் கேட்கலாம் என்றிருந்தேனே! சுவாமி இப்படிச்சொல்லிவிட்டாரே! இதற்கென்ன செய்வதென்றாலோசித்து சுவாமியைநோக்கி, "என்னாண்டவனே உம்முடைய திருவுளத்தின்படியே கேட்கின்றேன். என்னவென்றால், என் பேரனுக்குப் பேரன் ஏழுநிலை மாடத்திலிருந்து பொன்னுலகத்திலே பாலும் அன்னமுமாகச் சாப்பிட என் கண்களிக்கப்பார்த்துவிட்டுச்சாகுப்படியாக இந்த ஒருவரம் மாத்திரம் அனுக்கிரகம் செய்தால் போதும்" என்று கேட்டான். இப்படி இவன் கேட்டதிலே திரவியமும், புத்திரபௌத்திர பாக்கியங்களும், நேர்த்தியான வீடும், கண்களும், என்கிற எல்லாவரங்களும் அடங்கியிருத்தலால் சுவாமியானவர் அவனுடைய யுக்திவார்த்தைக்காக மகிழ்வடைந்து அவனுடைய இஷ்டப்படிக்கே வரத்தையளித்து மறைந்துபோனார். இது கட்டுக்கதையானாலும் புத்திசாலித்தனமாகவும் யோசித்து யுக்தியாகவும், ஒவ்வொருவரும் பேச அறிந்திருக்கவேண்டியது என்பதை எவ்வளவு நன்றாக விளக்கிக்காட்டுகிறது. பதட்டத்திலும் மூடத்தனத்திலும் ஒருவன் அடைந்த நஷ்டத்தை அடியில்வரும் விஷயம் குறிக்கின்றது. என்னவெனில்: இராவணனையும் அவன் தம்பி கும்பகர்ணனையும் பற்றி இதைப் படிக்கும் சிறுவர் சிறுமிகளுக்குத் தெரிந்திருக்கலாம். கும்பகர்ணனானவன் நெடுநாள் பிரமனைக்குறித்து ஊசிமுனையிலும் ஒற்றைக்காலிலுமாய்க் கண்டோர்கள் அதிசயிக்கத் தவமிருந்தான். பிரமதேவனும் அவன் செய்யும் தவத்திற்கு ஈடுபட்டவனாகி அன்னவாகனத்தின் மீதிலேறிக்கொண்டு அவன் முன் தோன்றி "கும்பகர்ணனே! இனி உடலைவருத்தும் தபசை விட்டொழிவாய் நீ இச்சித்த வரத்தைக்கொடுக்கிறேன் கேள்" என்றனர். அனேகநாட்களாய் நித்தியதத்துவம் கேட்கவேண்டுமென்று எண்ணியிருந்த கும்பகர்ணன், ஆத்திரத்திலும் செருக்கினாலும் தன்னெண்ணத்தைமறந்து, தபசைவிட்டெழுந்து வாய் குழறி "ஸ்வாமி! எனக்கு நித்திரைதத்துவத்தை கிருபைசெய்து கொடுத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தான். பிரமதேவரும் அந்தப்படியே வரத்தைக்கொடுத்து விட்டுத் தன்னிருப்பிடம் சென்றார். அதன் பிறகு கும்பகர்ணன் தான் கேட்டவரத்தை நினைத்து தன்மூடத்தனத்தாலுண்டான பிசகை எண்ணி வருத்தப்பட்டான். என்னபிரயோசனம்! ஆயுள் காலம் வரையில் தூங்கியே காலத்தைக் கழித்தான். இதைப்படிக்கும் சிறுவர் சிறுமிகளே! உங்களுக்குப் பதட்டமும் ஆத்திரமும் வந்த சமயத்தில் இந்தக்கதையை நினைத்துக்கொள்ளுங்கள். மூடக் கும்பகர்ணனைப்போலிராமல் கோமுட்டியைப்போல் பேச முயலுங்கள்.

சிங்காரம்மாள்,

## To Our Subscribers.

**Some of our subscribers are still in arrears for Vol. X. These and others will please remit their arrears for Vols. X and XI at once with their advance for the current volume or receive the next number by V. P. P. for the arrears due.**

### நமது சந்தாதாரர்களுக்கு.

நமது சந்தாதாரர்களிற்சிலர் இன்னும் 10-வது வாலியத்துக்குரிய சந்தாவைச்செலுத்தவில்லை. இவர்களும் மற்றவர்களும் 10, 11-வது வருஷப்புத்தகங்களுக்குரிய சந்தாவையும் 12-வது வாலியத்துக்குள்ள சந்தாவையும் உடனே அனுப்பல்வேண்டும். அல்லது அடுத்த சஞ்சிகையை பாக்கி யுள்ள சந்தா தொகைக்கு V. P. P. மூலமாக அனுப்புவதைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

**D. K. Agency.**

20*th May*, 1903. அ. ப. ஏஜன்ஸி.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As.: Back Nos. 8 As. each.

**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People :—

**Subscrn. Price: Yearly Rs. 4; Half-yearly Rs. 2-2.**

**Single copy, current No. 5½ As.; Back Nos. 6 As. Each.**

**English & Foreign Subscription 5s 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each yea Enrolled Subscribers may not withdraw except at the end of the year

☞ To regular annual subscribers 2 months grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence.

# "ANANDA MISSION"

### For the Propogation of Truth and Knowledge.

**As the Way to Health, Happiness and Life, Through Self-Help, Self-Control and Self-Culture.**

***"EKAM SATYAM BRAHMA."—SRUTIVAK.***

" Seek Truth wherever you can find it,"

" But Make you Choice and Stick to it "

till you reach the end.

" *Truth is hard Finding !*" **Yes,** " *Uncompromising too,* **when** *whole;* **Yet Try !** " *Awake, Arise and Stop not till you reach the Goal,*"—*Sruti.*

' And Ye shall Know the Truth and the Truth shall make you Free"—Christ.

All persons who love Truth for its own sake and are willing to show good-will towards All, regardless of race, creed, religion caste or color, will be eligible to become members, helpers or sympathisers of the Mission as it may suit their intelligenc, development and selfless state

Sincerity in thought, word and deed, an essential and unfailing condition to be scrupulously fulfilled by all.

***Satyameva Jayati.***

**Hail! Ananda Natesa!**

*Sri Akandananda Satguruve Namaha.*

### விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

**தளமான காகிதப்பதிப்பு:—** அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

**லேசான காகிதப்பதிப்பு:—**:சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.

தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

**வருஷாரம்பத்திலே** (அதாவது மேமாசத்தில்) தவருமல் கட்டினுல் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினுல் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும் போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கு மிடமிராது.